Regd. M. No. 5734, Phone No. 2184

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம் JANASAKTHI

(காலைப் பதிப்பு)



மலர் 16 இதழ் 65] சென்னை 21-10-59 விகாரி ஆண்டு ஐப்பசி மீ 4உ புதன்கிழமை [4 பக்கங்கள் 7 காசுகள்

# கேரள முக்கூட்டு முன்னணியில் முரண்பாடுகள்



சென்னையில் தோழர் இ. எம். எஸ். ஊர்வலமாக அழைத்துச் செல்லப்படும் காட்சி.

## தேர்தலுக்குப்பின் என்ன என்பதற்குப் பதில் இல்லை

### பொதுவான தேர்தல் அறிக்கை கிடையாதாம்

### பட்டம் மட்டும் பதவிக் கனவு காண்கிறார்

[நமது விசேஷ நிருபர்]

திருவனந்தபுரம், அக். 20—

**காங்கிரஸ்-பிரஜா சோஷலிஸ்ட், முஸ்லீம் லீக் கட்சிகளின் முக்கூட்டு முன்னணி ஏற்படுத்தப்பட்டு இதர கம்யூனிஸ்டல்லாத கட்சிகளுக்கு ஆசை வலையும் பாசவலையும் விசப்பட்டாலும் இன்னும் இந்த முன்னணி திறம்படச் செயல்படத் தக்க ஒரு ஐக்கிய ஸ்தாபனமாக உருவாகவில்லை என்று 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையின் திருவனந்தபுரம் நிருபர் எழுதியுள்ளார்.**

கண்மூடிக் கம்யூனிஸ்ட் எதிர்ப்பு என்ற எதிர்மறைக் கோட்பாடு ஒன்றே இந்தக் கட்சிகளைப் பிணைத்திருக்கும் சங்கிலியாக இருக்கிறது. இதன் விளைவாக வேறு பிரச்சினைகள் எழும் போதெல்லாம் சிக்கல்கள், தகராறுகள், சீர்கேடுகள் தலைவிரித்தாடுவதை காணலாம்.

காங்கிரஸ்-பி. சோ. கட்சி முஸ்லிம் லீக் தமக்குள் எல்லா ஸ்தானங்களையும் பங்கு போட்டுக் கொண்டன. ஆர். எஸ். பி. கே. எஸ். பி. போன்ற கட்சிகளுக்கு ஸ்தானங்கள் ஒதுக்கப்படவில்லை. இந்த இரு கட்சிகளின் தலைவர்களும் காங்கிரஸுடன் பேரம் பேசுகின்றனர். ஸ்தானங்கள் தராவிட்டால் தனியாகப் போட்டியிடப் போவதாக அச்சுறுத்துகின்றனர்.

#### தலைவலி

ஸ்தானங்கள் வினியோகித்தது பெரிய தலைவலியாக வந்து இருக்கிறது. தோற்றுப்போகும் இடமாகத் தமக்கு அதிகம் தந்துள்ளதாகப் பி. சோ. ஆரம்பத்திலேயே கூக்குரலிட்டது. திருவனந்தபுரம் ஜில்லாவில் பி. சோ. வுக்கு செல்வாக்குக்கு

அமிதமான ஸ்தானங்களைக் கொடுத்திருப்பதாகக் காங்கிரஸ் புகார் புகை எழுப்பியது. தமிழர் செல்வாக்குள்ள இடங்களில் காங்கிரஸ் சார்பில் போட்டியிட நாடார் சமூகத்திற்கு நான்கு இடங்கள் ஒதுக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கை குட்டை குழப்பியுள்ளது.

இந்த முக்கூட்டு முன்னணிக்குப் பொதுவான திட்டம் இல்லை. எந்த ஒரு தனிக்கட்சிக்கும் பூரண மெஜாரிட்டி கிடைக்க முடியாத வகையில் தான் மூன்று கட்சிகளும் ஸ்தானங்களைப் பங்கு போட்டுக் கொண்டிருக்கின்றன. தேர்தலுக்குப் பின்னுள் என்ன செய்யப் போகிறார்கள் என்பதற்கு எவ்விதச் சூசகமும் இல்லை.

முக்கூட்டு முன்னணி தேர்தலில் வெற்றி பெறும் என்றோ, ஸ்திரமான ஆட்சியை ஸ்தாபிக்க முடியும் என்றோ பொது மக்களை நம்பச் செய்வதற்கு ஸ்தூலமான எதுவும் இந்த முக்கூட்டு முன்னணியில் கிடையாது.

கலகத் தலைவர் மன்னத்து பத்மநாபனுக்கே சந்தேகம் தட்டி விட்டது. முக்கூட்டு முன்னணி வேலைகள் சரிவர முன்னேறவில்லை என்கிறார் அவர்.

#### பட்டத்தின் சமாதானம்

முதலமைச்சர் பதவிக்காகவே கொட்டாவி விட்டுவரும் பட்டம்தாணுப்பிள்ளை தேர்தலுக்கு அப்புறம் என்ன என்பது பற்றி ஆழ்ந்த யோசனைகள் செய்யவேண்டுமெனக்கிறார். இன்று நிருபர்களுக்குப் பேட்டியளித்துப் பேசுகையில் அவர் மேற்கண்டவாறு கூறினார். கம்யூனிஸ்டுகளைத் தேர்தலில் தோற்கடிப்பது என்பது முதலாவது கட்டமே. அதற்குப் பின் சர்க்கார் பிறவி சமூகப் பொருளாதார மாறுதல்களைக் கொண்டு வந்து மக்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும் என்று உபதேசித்தார்.

தேர்தல் கூட்டணிக்கு வந்த கட்சிகள் ஏன் கூட்டாக ஒரு தேர்தல் அறிக்கை வெளியிடவில்லை என்று கேட்ட கேள்விக்கு பொது அறிக்கையோ, தனித்தனி அறிக்கையோ எல்லாம் ஒன்று தான் என்று மழுப்பினார். ஸ்தானங்கள் பங்கு போட்டுக் கொண்டது பற்றி எடுத்துள்ள அதிருப்தி பற்றிக் கேட்ட போது அதிருப்திகள் இருக்கலாம் ஆனால் கம்யூனிஸ்டல்லாத கட்சிகள் வெற்றியடையும் என்றார். தொகுதி பங்கீடு பற்றி காங்கிரஸ் பொதுச் செயலாளர் ஸ்ரீ தி. கசேதா திருவாளியுடன் நாளை பேச்சுவார்த்தைகள் நடத்தப் போவதாகப் பட்டம் தாணுப்பிள்ளை அறிவித்தார்.



சென்ற இடமெல்லாம் தோழர் இ. எம். எஸ். ஸுக்கு மாலைகள் அணிவிக்கப்பட்டன.

### கூட்ஸ் வண்டியுடன் பிரயாணிகள் ரயில் மோதல்

அலகாபாத், அக். 20—

கான்பூர்—அலகாபாத் மார்க்கத்தில் வந்து கொண்டிருந்த பிரயாணிகள் ரயில் ஒன்று பிதான்பூர் ரயில்வே ஸ்டேஷனில் ஒரு கூட்ஸ் ரயிலுடன் மோதியதால் விபத்து ஏற்பட்டது.

### ரூ.48 மதிப்புள்ள 1 டன் சிமெண்ட் ரூ. 118-க்கு விற்பனையாகிறது

#### சர்க்கார் திட்டத்திற்கு என்று சர்க்கார் நிறுவனமே அடிக்கும் கொள்ளை

ஹைதராபாத், அக் 20—

ஆந்திர ராஜ்யத்தில் நிர்மாணிக்கப்பட்டுவரும் நாகார்ஜுன சாகர் திட்டத்தின் செலவு நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. இதற்குப் பிரதான காரணம் இந்த சர்க்கார் திட்டத்திற்கு சிமெண்ட் சப்ளை செய்யும் அரசாங்க வர்த்தக நிறுவனம் ரூ 48க்கு வாங்கும் ஒரு டன் சிமெண்டுக்கு ரூ 118 வரை விலை ஏற்றிக் கொள்ளை லாபம் அடிப்பதுதான்.

மச்சர்லா சிமெண்ட் தொழிற்சாலையிலிருந்து டன் ரூ 48க்கு சிமெண்ட் வாங்கப்படுகிறது. இது நாகார்ஜுன சாகர் திட்டத்திலிருந்து 12 மைல் தூரத்திலேயே இருக்கிறது. இதற்கு போக்குவரத்துச் செலவாக டன்னுக்கு ரூ 15 வசூலிக்கப்படுகிறது.



### ரூ. 12½ சம்பள உயர்வு

#### ஐஸ் கம்பெனி தொழிலாளர் மாபெரும் வெற்றி

சென்னை, அக் 20—

சிட்டி ஐஸ் அண்டு கோல்ட் ஸ்டோரேஜ் கம்பெனி அண்டு போனிக்ஸ் சோடா ஒர்க்ஸ் தொழிலாளர்கள், கிண்டி எஸ்டேட் அண்டு ஜெனரல் ஒர்க்ஸ் யூனியன் மூலம் போராடி கணிசமான வெற்றிகளைப் பெற்றுள்ளனர்.

10-10-59-ம் தேதி லேபர் ஆபிஸர் முன் கன்ஸிலேஷன் நடந்ததில் கீழ்க்கண்ட கோரிக்கைகளைக் கொடுப்பதாக நிர்வாகம் ஏற்றுக் கொண்டு ஒப்பந்தம் ஏற்பட்டது.

எல்லா தொழிலாளர்களுக்கும் மாதம் ஒன்றுக்கு ரூ 12-8-0 சம்பள உயர்வு 1-7-59-ம் தேதியிலிருந்து கொடுப்பது என்று முடிவு செய்யப்பட்டது.

போனஸ் 1957, 58-ம் வருஷத்திற்கும் 1958 1959-ம் வருஷத்திற்கும் இரண்டு வருஷத்திற்கு 3 மாத சம்பளத்தை போனஸ் ஏற்கனவே, கொடுத்து இருக்கும் இரண்டு வருஷத்திற்கு 2 மாத சம்பளம் போக, 1 மாத சம்பளத்தை கொடுப்பது இது இல்லாமல் 3 வருஷத்திற்கு லாபம் இருந்தாலும், நஷ்டம் இருந்தாலும் 1½ மாதசம்பளத்தை போனஸாக கொடுப்பது என்று முடிவு செய்யப்பட்டது.

கிராஜுட்டி :—ஒருவருஷம் சர்வீஸுக்கு 15-நாள் சம்பளத்தை ஒரு வருஷ சர்வீஸ் செய்த, எல்லா தொழிலாளர்களுக்கும் கொடுப்பது என்று முடிவு செய்யப்பட்டது. இந்தக் கம்பெனியில் 35 வருஷம் சர்வீஸ் முதல் 3 வருஷம் சர்வீஸ் வரை செய்து இருக்கிறார்கள்.

ஒப்பந்தத்தில் சங்கச் செயலாளர் என். லோகநாதனும் நிர்வாகம் சார்பில் நரிமன் கே. இராஜியும் கையெழுத்திட்டார்கள்

### மூன்றும் திட்ட கால முடிவுக்குள் உணவில் சுயதேவைப் பூர்த்தி

ராய்பூர், அக் 20—

மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலம் முடிவதற்குள் நாட்டை உணவு விஷயத்தில் சுயதேவைப் பூர்த்தியுள்ளதாகச் செய்யத் தாம் ஒரு திட்டம் தயாரித்துத் திட்டக் கமிஷனிடம் சமர்ப்பிக்கப்போவதாகத் திட்ட மந்திரி குல்சாரிலால் நந்தா இங்கு கூறினார்.

பத்திரிகை நிருபர்களிடையே பேசுகையில் அவர் மேற்கண்டவாறு குறிப்பிட்டார். மூன்று தேசியத் திட்டங்கள் போட்டு நிறைவேற்றிய பிறகும் வெளிநாடுகளிலிருந்து உணவுப் பொருள்களை இறக்குமதி செய்வதென்பது மிகமிக வருந்தத்தக்க காரியம் என்று அவர் கூறினார். திட்டக் கமிஷன் உறுப்பினர்களும் தம் போலவே கருதுவர் என்று நம்புவதாக தெரிவித்தார்.

போதிய முயற்சிகள் செய்யப் படுமானால், மூன்றும் திட்ட இறுதியில் உணவு விஷயத்தில் நாட்டின் சுயதேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளும் நிலைமை ஏற்படும். இந்தப் பிரச்சினை அடிப்படையானது என்று கருதி மூன்றும் திட்டத்தை உருவாக்கும்போது உரிய முக்கியத்துவம் கொடுக்கப்படும்.



## இலங்கையில் பொதுத் தேர்தல் எந்த நேரத்திலும் நடைபெறலாம்

### ஆளும் கட்சி கலகலக்கிறது

#### ஸ்தல ஸ்தாபன மந்திரி விலக்கப்பட்டார்

கொழும்பு, அக் 20—

இலங்கையில் எந்த நேரமும் பொதுத் தேர்தல் நடைபெறலாம் என்று இலங்கைப் பிரதமர் ஆளும் கட்சியின் பார்லிமெண்டரி போர்டின் அவசரக் கூட்டத்தில் கூறினார்.

எதிர்க் கட்சிகள் கூட்டாகக் கொண்டுவந்துள்ள நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின்மீது நவம்பர் 11-ம் தேதியோ அல்லது சாத்தியமான அளவு கூடிய விரைவில் பார்லிமெண்டில் விவாதம் நடைபெற அனுமதிக்கப் போவதாகவும் கூறினார். அமைச்சரவை கவிழ்ந்தால், பொதுஜன ஐக்கிய முன்னணிக் கட்சியின் தலைவராகச் செயல்பட தயங்க மாட்டேன் என்றும் கூறினார்.

#### ஸ்தல ஸ்தாபன மந்திரி பதவி போயிற்று !

இலங்கை ஸ்தல ஸ்தாபன மந்திரி திருமதி விமலா விஜயவர்த்தனா இன்று பதவியிலிருந்து நீக்கப்பட்டு விட்டார். இந்தச் செய்தியையும் பிரதமர் பார்லிமெண்டரி கூட்டத்தில் அறிவித்தார். இலங்கை அமைச்சரவையில் முதல் பெண் மந்திரியான திருமதி விமலா விஜயவர்த்தனா, பிலிப் குணவர்த்தனா அமைச்சரவையில் கொண்டு வந்த நிலச்சீர்திருத்த மசோதாவை பகிரங்கமாகக் கண்டித்தவர் என்பதும், இவ்வாண்டு குறைந்த வட்டிக்கு மக்களுக்கு கடன் வசதி செய்யும் கூட்டுறவு அபிவிருத்தி பாங்கி மசோதாவை எதிர்த்தவரென்பதும், அரசாங்கத்திலுள்ள மார்க்ஸிய கருத்துள்ள மந்திரிகளை பதவியிலிருந்து நீக்க வேண்டுமென்று வற்புறுத்தியவரென்பதும் வாசகர்களுக்கு நினைவிருக்கலாம்.

#### ஆளும் கட்சியின் பலம் குறைகிறது.

திருமதி விமலா விஜயவர்த்தனா பதவியிலிருந்து நீக்கப்பட்டதும், கட்சியிலிருந்தும் ராஜினாமாச் செய்துவிட்டார். அதனால் ஆளும் கட்சியின் உறுப்பினர் எண்ணிக்கை 49 ஆகக் குறைந்துவிட்டது. அவர்களில் இருவர் இப்பொழுது வெளிநாடுகளில் இருப்பதால், ஆளும் கட்சி அங்கத்தினர்களின் எண்ணிக்கை 47 ஆக இருக்கிறது. எதிர்க் கட்சியில் 47 அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். எனவே மந்திரிசபை தற்பொழுது ஆட்டம் கண்டு போய் இருக்கிறது.

#### கடைசிச் செய்தி

### லாஞ்சுவிலிருந்து சீனப் படைகள் வாபஸ்

புதுடில்லி, அக். 20—

நீபா பகுதியில், மாக்மோகன் எல்லையிலுள்ள லாஞ்சு என்ற இந்திய எல்லைப்புற காவல் கூடத்திற்கு இரண்டு மைல் சமீபத்தில் இந்தியப் படைகள் இன்னும் இருக்கின்றன. சீக்கிரமே சீனப் படைகள் அங்கிருந்து போய்விடுமென்றும், அதற்கான உடன்பாட்டுக்காக இந்தியப் படைகள் காத்திருப்பதாகவும், சீனப்படைகள் சென்ற பிறகு இந்தியப் படைகள் லாஞ்சுவில் பிரவேசிக்குமென்றும் கூறப்படுகிறது.

மாக்மோகன் எல்லைக்கோட்டை பெரிய அளவில் திருத்துவதுபற்றி இந்திய சர்க்கார் பேச்சுவார்த்தை நடத்தாது என்றும், வேண்டுமானால் அங்குமிங்கும் சிறிய அளவில் மாறுதல் செய்ய பேச்சுவார்த்தை நடத்தலாமென்றும் ஏற்கனவே நேரு அறிவித்தது தெரிந்ததே.





## அமைச்சர்களே! நியாயவிலை என்ற பெயரில் அநியாய விலைக்கு விற்பது நீதியா?

ஜனசக்தி
சென்னை 21-10-1959

# உணவுக்காக ஒன்றுசேர்ந்து போராடுவோம் வாரீர்!

உணவு நிலைமை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டு வருகிறது. குறுவை அறுவடையில் கொள்முதல் இல்லை என்று அரசாங்கம் அறிவித்த பிறகு விலைவாசி மேலும் உயர்ந்துவிட்டது.

நெல் மூடை ஒன்று ரூ 19-8-0 வரையிலும் உயர்ந்துள்ளதாகவும், 2 மணங்கு குறுவை புழுங்கல் அரிசி மூடை ரூ. 43-8-0 லிருந்து ரூ. 44 வரை உயர்ந்துவிட்டதாகவும் தஞ்சை ஜில்லா குற்றாலத்திலிருந்து வந்துள்ள செய்தி ஒன்று கூறுகிறது.

அரசாங்க நடவடிக்கை இல்லை என்ற அறிவிப்பு வந்ததும் உணவுச் சூதாடிகள் நெல்லையும் அரிசியையும் வாங்கி பதுக்க ஆரம்பித்து விட்டார்கள். அதனாலேயே உணவு விலை திடீரென உயர ஆரம்பித்துவிட்டது.

அரசாங்கத்தின் கையிலுள்ள ஸ்டாக்கோ, இதுவரை திறக்கப்பட்டுள்ள நியாயவிலைக் கடைகளோ, அல்லது அங்கு விற்கப்படும் அரிசியின் விலையோ உணவு மார்க்கெட்டை எந்த விதத்திலும் கட்டுப்படுத்தவில்லை என்பது தெளிவு.

உணவு சப்ளைக் கமிஷனரின் அறிக்கைகள் மக்கள் சார்பில் அரசாங்கத்தின் மீது கூறப்படும் குற்றச்சாட்டுகளுக்குச் சமாதானம் கூறும் விதத்தில் இருக்கின்றனவே தவிர, மக்களிடையே ஏற்பட்டுள்ள ஆத்திரத்திற்கும் கோரிக்கைகளுக்கும் தக்க பரிகாரம் காணும் விதத்தில் இல்லை.

உணவு விலை உயர்வது மட்டுமல்ல. சர்க்கரைக்குக் கூடப் பஞ்சம். விலை உயர்ந்ததோடு கிடைப்பதே அரிதாகி விட்டது; காப்பிக்கொட்டைக்காகக்கூட மக்கள் கியூ வரிசையில் நிற்க வேண்டிய நிலைமை ஏற்பட்டுள்ளது.

இந்த மோசமான நிலைமையில் அபிவிருத்தி ஏற்படும் என்ற நம்பிக்கை இல்லை. அரசாங்கத்தின் போக்கு அடியோடுமாறினாலன்றி தீவிர நடவடிக்கை எடுக்க அரசாங்கம் முன்வந்தாலன்றி நிலைமை அபிவிருத்தி அடையாது.

ஆனால் சென்னை அரசாங்கமோ தனக்குச் சட்டசபையிலுள்ள மெஜாரிட்டி பலத்தில், உபதேர்தல் வெற்றிகளில் மதிமயங்கி மக்களது கோரிக்கைகளை உதாசீனம் செய்து வருகிறது. மக்களைத் துச்சமாக மதிக்கிறது என்பதையே அரசாங்கத்தின் அறிக்கைகளும் போக்குகளும் தெளிவாக்குகின்றன.

இந்நிலையில் நியாய விலையில் மக்களுக்கு உணவு கிடைக்க வேண்டுமென்றால் போராடுவதைத் தவிர பாதிக்கப்பட்ட மக்கள் முன்பு வேறு வழியே இல்லை.

தமிழகத்திலுள்ள எதிர்க் கட்சிகள் உணவு நிலைமை மோசமாகி வருவதையும் அதைத் தடுக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென்பதையும் உணருகின்றன.

கம்யூனிஸ்டு கட்சி உணவு நிலைமையை முக்கியப்படுத்தி ஸ்தூலமாக அரசாங்கத்தின் தவறான போக்கை அம்பலப்படுத்தியுள்ளது. படி அரிசி 12 அணாவில் கிடைக்கப் போராட முன் வந்துள்ளது.

அரசாங்கத்திற்குச் சமர்ப்பித்த மகஜரில் கம்யூனிஸ்டுக் கட்சியும் தமிழ்நாடு சோஷலிஸ்டுக் கட்சியும் கையொப்பமிட்டுள்ளன. ஏ. ஐ. டி. யு. சி.யைச் சேர்ந்த தொழிற்சங்கங்கள் இப்போராட்டத்திற்கு ஆதரவு தெரிவித்துள்ளன.

நியாயவிலைக் கடைகளின் எண்ணிக்கையை அதிகப்படுத்த வேண்டுமென்றும் அரிசியை இன்னும் குறைந்த விலைக்கு விற்க வேண்டுமென்றும், இதனால் ஏற்படக்கூடிய நஷ்டத்தை அரசாங்கம் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும் பிரஜா சோஷலிஸ்டுக் கட்சியின் தமிழ்நாடு கமிட்டி வலியுறுத்தியுள்ளது.

அத்துடன் "வெறும் வேண்டுகோள்களெல்லாம் நம் அரசாங்கத்தினிடத்திலே பயன்படுவதில்லையாதலால், மேற்குறிப்பிட்ட நடவடிக்கைகளை உடனே எடுக்க வேண்டுமென்று மாநில முழுதும் வலுவானகிளர்ச்சி செய்யும்படி நிர்வாகக் கமிட்டி மக்களைக் கேட்டுக் கொள்கிறது" என்றும் இக்கிளர்ச்சிக்கு தம் கட்சி உறுப்பினர் தலைமை தாங்க வேண்டுமென்று அக்டோபர் 10ந் தேதியில் பி. சோ. கட்சியின் கமிட்டிக் கூட்டம் கேட்டுக் கொண்டுள்ளது.

அண்மையில் சென்னையில் நடந்த தி. மு. க. மாநாட்டில் "இனியும் உணவுப் பொருட்களின் விலையைக் கட்டுப்படுத்த மாநில மத்திய அரசுகள் தவறுமானால் அவர்களின் இப்போக்கை வன்மையாகக் கண்டிக்கும் வகையில் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமென்று பொதுச் செயலாளர் அவர்களை இம் மகாநாடு கேட்டுக்கொள்கிறது" என்ற தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

இவ்வாறு குறைந்த விலையில் மக்களுக்கு உணவு கிடைக்கச் செய்யப் போராடவேண்டிய அவசியத்தை கம்யூனிஸ்டு கட்சி, தி.மு.க., சோஷலிஸ்டு கட்சி, பி சோ. ஆகிய கட்சிகள் உணர்ந்து தீர்மானங்கள் நிறைவேற்றியிருக்கின்றன. இன்று உணவு நிலைமை எவ்வளவு தூரம் மோசமாகி இருக்கிறதென்பதையே இது காட்டுகிறது.

சென்னை அரசாங்கத்திற்கு இத்தகைய அறிவிப்புகளுடன் நிற்பது உரைக்குமா என்பதுதான் கேள்வி. செயலில் இறங்கினாலொழிய மாறுதல் ஏற்படப்போவதில்லை.

பல அரசியல் கருத்து வேற்றுமைகள் இருந்தபோதிலும் மக்கள் உணவுக்காக ஒன்றுசேர்ந்து நின்று போராட முடியும். அதையே மேற்கூறிய தீர்மானங்கள் காட்டுகின்றன. இது பொதுவான பிரச்சினை.

தீர்மானம் நிறைவேற்றியதுடன் நின்றுவிடாமல், அதை நடைமுறையில் காண போராட முன்வரும்படி அழைக்கிறோம். இதில் ஒன்று சேர்ந்து நின்று போராடுவது மக்களுக்கு மகத்தான சேவை செய்வதாகும். தமிழ்நாடு மக்கள் அதைத்தான் எதிர்பார்க்கிறார்கள்.

## கேரள நிர்வாக விஷயங்கள்

### பந்த்-ராவ் விவாதம்

புதுடில்லி, அக். 19—

கேரள ராஜ்ய நிர்வாக விஷயங்கள் பற்றி விவாதிப்பதற்காக இங்கு வந்துள்ள ராஜ்ய கவர்னரின் ஆலோசகர் பி. வி. ஆர். ராவ் இன்று யூனியன் உள்துறை அமைச்சர் பந்தையும் இதர அதிகாரிகளையும் சந்தித்தார்.

கலைக்கப்பட்ட கேரள சட்டசபையால் நிறைவேற்றப்பட்டு இப்பொழுது ஜனாதிபதியின் அங்கீகாரத்துக்காக காத்திருக்கும் கேரள விவசாய உறவுகள் மசோதா, ஜன்மிகர ஒழிப்பு மசோதா, விவசாயிகள் கடன் நிவாரண மசோதா முதலியன பற்றி அவர் விவாதித்தார் எனத் தெரிகிறது.

நவம்பர் 25-ம் தேதியன்று திருத்தப்பட்ட வாக்காளர் பட்டியல் பிரசுரிக்கப்படும் எனத் தெரிகிறது. விதிகளின்படி அறிவிப்புத் தேதிக்கும் வாக்குப்பதிவு நடைபெறும் தேதிக்கும் 37 நாட்கள் இடைவெளி இருக்கவேண்டும்.

இம்மாத இறுதியில் இங்கு நடைபெறும் கவர்னர்கள் மகாநாட்டில் கலந்துகொள்ள இங்கு வரவிருக்கும் கேரள கவர்னரும் யூனியன் உள்துறை அமைச்சரைச் சந்தித்து நிர்வாக விஷயங்கள் பற்றி விவாதிப்பார் எனத் தெரிகிறது.

# காங்கிரஸ் சர்க்கார் நிலச்சீர்திருத்தம் செய்யத் தயங்கும் ரகசியம் என்ன?

## சூலூர் பிர்க்கா விவசாயிகள் மாநாட்டில் தலைவர்கள் கண்டனம்

### விவசாயப் பொருள்களுக்கு நியாயவிலை தரக் கோரிக்கை

கோவை, அக் 18—

கோவை ஜில்லா, சூலூர் பிர்க்கா விவசாயிகள் மகாநாடு 15-10-59ந் தேதி சூலூர் மணி தியேட்டரில் ஆரம்பமாகியது. சூலூர் பிர்க்காவில் முதன் முதலில் விவசாய இயக்கம் ஆரம்பமான தொட்டியம்பாளையத்தில் இருந்து விவசாய சங்கக் கொடி மகாநாட்டிற்கு விவசாயிகளால் கொண்டுவரப்பட்டது. அவர்கள் சுமார் 7 மைல் ஊர்வலமாக நடந்துவந்து சேர்ப்பித்தக் கொடியை தோழர் கே. பி. ஜானகி ஏற்றி வைத்தார்.

**கே. பி. ஜானகி**

கொடியேற்றி விட்டு அவர் பேசுகையில், "நிலச் சீர்திருத்தம், நியாயவாரம், கடன் நிவாரணம் போன்ற விவசாயிகளின் கோரிக்கைகளை முதன்முதலில் கோஷமாக வைத்ததும், அதற்காக போராட்டத்தைத் துவக்கியதும் இந்த செங்கொடிதான்". என்றார். விவசாயிகள் இயக்கத்திற்கு களப்பால் குப்புவினுடையதைப் போன்ற அநேக குடும்பங்கள் செய்துள்ள தியாகத்தை அவர் விவரித்தார்.

எண்ணற்றவர்களின் தியாகத்தால் வளர்ந்த இந்த செங்கொடி உலகமெலாம் பறக்கிறது. ஏன்? இப்போது சந்திரனிலும் பறக்கிறது என்றார். தொடர்ந்து பேசுகையில், "காங்கிரஸ் சர்க்கார் நிலச்சீர்திருத்தம் செய்யாது என்பதற்கு உதாரணம், நிலச் சீர்திருத்த மசோதாவைக் கொண்டு வந்த கேரளசர்க்காரை டிஸ்மிஸ் செய்தது ஒன்றே போதும்" என்றார். 1959க்குள் நிலச் சீர்திருத்தம் கொண்டுவரத் தவறினால் இந்த சர்க்காரையே விவசாயி மக்கள் நிலைக்க விடக்கூடாது என்றார்.

**என். கே. பழனிச்சாமி**

அடுத்து, தோழர் வெங்கடாச்சலம் வரவேற்புரை நிகழ்த்தினார். மாநாட்டுக்குத் தோழர் என். கே. பழனிச்சாமி எம். எல். ஏ. தலைமை வகித்தார். அவர் தன்னுடைய தலைமை உரையில், 'வெள்ளைக்காரன் ஆண்டபோது கூடத்தான், ஆண்டுக்கொரு புள்ளி விவரம் கூறிக்கொண்டிருந்தான். ஆனால் நாடு சுபிட்சமடைந்ததா? அது போலத்தான் இன்றைய காங்கிரஸ் ஆட்சியின் போக்கும் இருக்கிறது என்றார்.

அவனாசி, ஊத்துக்குளி போன்ற பகுதிகளுக்கு பவானி நீர் தரப்படவேண்டும். மேல் பவானி அணைக் கட்டி ஏன் வறண்ட பிரதேசங்களுக்கு நீர் தரக்கூடாது. அபிவிருத்தியைப் பற்றிப் பேசும் சர்க்கார்? பேசிவிட்டால் மட்டும் போதுமா? என்று கேட்டார். அபிவிருத்தி திட்டம் போடப்பட்டது 30 சதம் உணவு உற்பத்தி அதிகரிக்கத் தான் என்று சர்க்கார் கூறியது. ஆனால் 8 சதம் உணவு உற்பத்தி அதிகரிக்கக் கூட ஏற்படுத்த முடியவில்லை என்பதை இன்று சர்க்கார் ஒப்புக் கொள்ள வேண்டி நேரிட்டுள்ளது. ஏன்? சர்க்காருடைய மக்கள் விரோதக்கொள்கைதான் காரணம் என்றார். விவசாயப் பொருள்களுக்கு நியாயமானவிலை கிடைக்க வேண்டும், அதற்கு மார்க்கெட் வசதியும் வேண்டும். 6 மைல்களுக்கு அருகாமையில் விவசாயிகளுக்கு மார்க்கெட் வசதி வேண்டும். இதை இன்றைய தினம் சர்க்கார் ஒப்புக் கொள்ளவில்லை என்றார்.

**காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் யார்?**

சர்க்கார் விவசாயிகளுக்கு சாதகமாக இல்லை. சட்டசபையிலுள்ள காங்கிரஸ் எம். எல். ஏ.க்களை பார்த்தால் அந்த உண்மை உங்களுக்கு விளங்கும். 54 காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் 1000 ஏக்கருக்கு மேல் நிலமுள்ளவர்கள்! 11 காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் மில் முதலாளிகள்! 14 காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் பஸ் முதலாளிகள்! இவர்களைக் கொண்ட சட்டசபை எப்படி இருக்கும்? நிலச் சீர்திருத்தம் வேண்டும் என்று நாம் சட்டசபையில் சொன்னால், நிலச் சீர்திருத்தம் வேண்டாம்! மனச் சீர்திருத்தம்தான் வேண்டும் என்று இவர்கள் பேசுகிறார்கள்! இவர்களுடைய ஆட்சியில், தரகன் கூட குத்தகைகாரன் என்று ஹைகோர்ட் தீர்ப்பளிக்கிறது! குத்தகைதாரன் கூலிக்காரனாகிறான். கோபியில் இவர்கள் பெரிய மாநாடு நடத்தி-விவசாயிகளுக்கு நிலச்சீர்திருத்தம் வரப்போகிறது என்று முழங்கினர். ஆனால் இதே கோபி தாலுகாவில் 18,000 ஏழை விவசாயிகள் நிலவெளியேற்றம் செய்யப்பட்டுள்ளனர் என்றார்.

**கே. டி. ராஜு**

அடுத்து தோழர் கே. டி. ராஜு திறப்புரை நிகழ்த்தினார் "தமிழ்நாட்டு விவசாயிகள் 120 கோடி ரூபாய் கடன் பட்டுள்ளனர். வட்டி மட்டுமே 20 கோடியாகிறது. இந்தக் கடன் பளுவில் அகப்பட்டுத் தவிக்கும் விவசாயிகளுக்கு சர்க்கார் என்ன நிவாரணத்தை வைத்திருக்கிறது என்று கேட்டார். பண்டித நேரு விவசாயிகள் பிரச்சினைபற்றி அடிக்கடி பேசுகிறார். கோடிக் கணக்கில் செலவழிப்பதாகச் சொல்கிறார். காங்கிரஸ்காரர்கள் 12 ஆண்டு காலத்திற்கு மேல் ஆண்டு விட்டார்கள். சுதந்திரம் கிடைத்தும் 12 வருடத்திற்கு மேலாகிவிட்டது. இத்தனை நாட்களுக்குப் பின்பு நம்முடைய விவசாயிகளின் கோரிக்கை என்ன? தம்பிவாடி விவசாயிகளின் கோரிக்கையை உங்களுக்கு நினைவுபடுத்த விரும்புகிறேன். 20 வள்ளம் அளப்பதற்கு பதில் 24 வள்ளம் கேட்கிறார்கள். வருஷத்திற்கு வெற்றிலை பாக்கு போட 10 ரூபாய் கேட்கிறார்கள். இதைத் தர மறுக்கிறார்கள் நிலப் பிரபுக்கள், அவர்களுக்கு உடந்தையாக போலீசும், சர்க்காரும் இருக்கிறது என்றார்.

**பொறுப்பற்ற பேச்சு**

விலைவாசி ஏறியிருக்கிறது இதனால் விவசாயிக்கோ, வாரம், குத்தகைதாரனுக்கோ, லாபம் கிடைக்கவில்லை. உணவுப் பொருள்களை வாங்கிச் சாப்பிடும் மக்களுக்கும் லாபமில்லை. பிறகு யாருக்கு லாபம்? சர்க்கரை விலை ஏற்றத்தால் 150 முதலாளிகள் மட்டும் 18 கோடி ரூபாய் லாபம் சம்பாதித்துள்ளனர். இவர்களுக்கு இவ்வளவு லாபம் கிடைக்கலாமா? இதற்கு பிரதமர் நேரு என்ன சொல்கிறார். 11 லட்சம் டன் உற்பத்தியான சர்க்கரை, இப்போது 28 லட்சம் டன்னாகி உள்ளது. எனவே, இது மக்களுடைய சுபிட்சத்தைக் காட்டுகிறது என்கிறார். கனம் காமராஜர் என்ன சொல்கிறார்? விலைவாசி எங்குபோய் நிற்குமோ என்கிறார். இவர்களெல்லாம் பொறுப்பிலே உள்ள மந்திரிகள்! மக்களுடைய பிரச்சினை இவர்களுக்கு விளையாட்டாக இருக்கிறது. (சிரிப்பு) அவர்களுக்கு விவசாய மக்கள் நல்ல படிப்பினையை, ஸ்தாபன ரீதியாகத் திரண்டு எடுத்துச் சொல்லவேண்டும் என்றார்.

**பி. சீனிவாசராவ்**

அடுத்து தோழர் பி. சீனிவாசராவ் பேசினார். அவர் பேசுகையில், தமிழ் நாட்டில் 2½ கோடி ஏக்கர் நிலம் உள்ளது. 71 ஆயிரம் பட்டாதார்கள் இருக்கின்றனர். நிலம் சொந்தமாக இல்லாதவர்கள் 30 சதம் பேர்; 2 ஏக்கருக்கும் குறைவான நிலமுள்ளவர்கள் 28 சதம் பேர்; 5 ஏக்கர் நிலமுள்ளவர்கள் 30 சதம் பேர்; 10 ஏக்கர் நிலமுள்ளவர்கள் 10 சதம் பேர். அதற்கும் மேல் பல்லாயிரம் ஏக்கர் நிலமுள்ள நிலப்பிரபுக்கள் 7 சதம் பேர். நிலச்சீர்திருத்தம் வந்தால் சாதாரண விவசாயிகள் பாதிக்கப்படமாட்டார்கள். இந்த 7 சத நிலப்பிரபுக்கள்தான் பாதிக்கப்படுவர் என்றார். இன்றுள்ள சர்க்காருடைய போக்கால், நிலச்சீர்திருத்தம்வந்தாலும் விவசாயிக்கு நிலம் கிடைக்காது. இப்போதே நிலப்பிரபுக்கள் கர்ப்பத்திலுள்ள சிசுவின் பேரிலும், நிலத்தை எழுதி வைக்கிறார்கள். நிலச்சீர்திருத்தம் வந்தாலும் 6 லட்சம் ஏக்கர் நிலம்தான் மீதப்படும். இதை மக்கள் கவனத்தில் எடுத்துக்கொள்ள வேண்டும் என்றார்.

கேரள சர்க்கார் 15-ஏக்கர் உச்சவரம்பு நிர்ணயித்து மசோதா தயாரித்தது அதற்கு இன்னும் ஜனாதிபதியின் அங்கீகாரம் தரப்படவில்லை. இது தான் விவசாயிகளுக்கு அனுசரணையான போக்கா? என்று கேட்டார்.

இந்திய விவசாயிகள் தலையில் 1000 கோடி ரூபாய் கடன் விழுந்துள்ளது. சர்க்கார் தரப்பிலிருந்து 6 சதவீதம் தான் கடன் கிடைக்கிறது. இந்த 1000 கோடி ரூபாயில் அநியாயக் கடன் ஏராளமாக உள்ளது. அவற்றை சர்க்கார் ரத்து செய்யவேண்டும். வீசை சர்க்கரை அணா 13க்கு விற்றபோது ஒரு டன் கரும்பு விலை ரூ 39! வீசை 1-10-0 என்று சர்க்கார் விலை நிர்ணயித்துள்ளது. ஆனால் ரூ 3 கொடுத்தால்தான் இன்று சர்க்கரை கிடைக்கிறது. ஆனால் ஒரு டன் கரும்பின் விலை ரூ 39 தான்! கரும்பின் விலை அப்படியேதான் இருக்கிறது. ஆனாலும் சர்க்கரை விலை உயர்கிறது. இந்த நிலைக்கு காரணம் யார்? ஏன் அதை தடுக்கக்கூடாது? சர்க்கார் ஏன் சர்க்கரை வியாபாரத்தை எடுத்துக் கொள்ளக் கூடாது? என்று மந்திரிகளைக் கேட்டால், அவர்கள், வியாபாரிகளின் (பெரும் பண மூட்டைகள்) விமர்சனத்துக்கு ஆளாக நேரிடும் என்கின்றனர் ஒரு சிலரின் விமர்சனம்தான் அவர்களுக்குப் பெரிதாகப் படுகிறது 75 சதவிகிதம் உள்ள விவசாயிகளின் விமர்சனத்திற்கு காது கொடுக்கக்கூடாதா? என்று கேட்டார்.

சீனாவில் மக்கள் ஆட்சி மலர்ந்ததும், 3 கோடி நிலமற்ற விவசாயிகளுக்கு நிலம் தரப்பட்டது. உற்பத்தி செய்யும் பண்டங்களுக்குச் சரியான விலை நிர்ணயிக்கப்பட்டது ஆனால் இங்கோ சுதந்திர இந்தியாவிலோ நிலப்பசி, விலை நிர்ணயக் கோரிக்கை, எதுவும் நிறைவேற்றப்படவில்லை என்றார்.

**காமராஜருக்குக் கையாலாகவில்லை?**

தொடர்ந்து அவர் பேசுகையில், 6 வருடங்களுக்கு முன்பு மத்திய சர்க்கார் விவசாயக் கூலிகளுக்குக் குறைந்தபட்ச கூலிச் சட்டத்தைக் கொண்டுவந்தது. ஆனால், அதை நிறைவேற்றும் பொறுப்பு, அந்தந்த ராஜ்ய சர்க்கார்களுடையதே என்று விட்டுவிட்டது அந்த சட்டத்தை கேரள கம்யூனிஸ்ட் அரசாங்கம் நிறைவேற்றியது சங்கரன் நம்பூதிரிபாட்டுக்கு இருந்த அதிகாரமும், காமராஜருக்கு இப்போது உள்ள அதிகாரமும் ஒன்றுதான். ஆனால், சங்கரன் நம்பூதிரிபாட் குறைந்தபட்ச கூலிச் சட்டத்தை கொண்டுவந்தார்! காமராஜரால் கையாலாகவில்லை இதுதான் விஷயம் என்றார்.

**தீர்மானங்கள்**

பிற்பகலில் மகாநாடு மீண்டும் கூடியபோது, விவசாய இயக்கத்தின் வீரத்தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தப்பட்டது. கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் மறைவு குறித்தும் வருத்தம் தெரிவித்து தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டது.

வங்கத்திலும், பீஹாரிலும் உணவு கேட்ட மக்கள்மீது அடக்குமுறை பிரயோகிக்கப்பட்டதைக் கண்டித்தும், நியாய விலையில் உணவு கிடைக்கச் செய்யவேண்டுமென்று கோரியும், போராட்டத்தில் கைது செய்துள்ளவர்களை உடனடியாக விடுதலை செய்யக் கோரியும், கூட்டுப் பட்டா முறையை ரத்துச்செய்யக் கோரியும், ஆலை முதலாளிக்கு மட்டும் மின்சார கட்டணத்தைக் குறைத்தும், விவசாயிக்கு யூனிட்டுக்கு ¾ அணா இருந்ததை 0-1-0 ஆக்கியும் உள்ள சர்க்காரின் போக்கை கண்டித்தும், ஒரு அணாவை 8 ந. பை. ஆக மாற்றவேண்டுமென வற்புறுத்தியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

அபிவிருத்தித் திட்டங்களை எல்லா பகுதியும் சமமாகப் பெற வேண்டும் எனக் கோரியும், அரசியல் பாரபட்சம் காட்டப்படுவதைக் கண்டித்தும்,

கூட்டுறவு சங்கங்களில் விவசாய சங்க அங்கத்தினர்களைச் சேர்க்காமல் பாரபட்சம் காட்டுவதைக் கண்டித்தும், சாதாரண மக்களுக்கு சரியாக கடன் நிவாரணம் தரப்பட வேண்டுமென வற்புறுத்தியும்,

விவசாயிகள் விளைவிக்கும் பொருள்களுக்கு நியாயமான விலை நிர்ணயிக்கக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

**இதர தீர்மானங்கள்**

விவசாயக் கூலிகளுக்கு, திறமையான உழைப்புக்கு ரூ 1-4-0 என்றும், அதைவிடக் குறைந்த உழைப்புக்கு ரூ 1-0-0 என்றும் அடுத்து ரூ 0-12-0 என்றும் கூலி நிர்ணயித்திருப்பதால், விவசாயத் தொழிலாளர்கள் எவ்வளவு உழைத்தாலும், அதை 8-ம் தரம் என்று சொல்லி ரூ 0-12-0 தான் தரப்படுகிறது எனவே இது கூலி விவசாயிகளை ஏமாற்றுவதாகும். ஆகையால் இந்த முறையை நீக்கிவிட்டு நியாயமாக, கேரள சர்க்கார் செய்ததைப் போல கூலி நிர்ணயம் செய்யவேண்டும்.

உணவுப் பொருள்களின் விலை உயர்வைத் தடுப்பதற்கு சர்க்கார் உடனே நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும்.

குந்தா அணையில் மின்சாரம் எடுக்கப்பட்டு மீதமாகும் கழிவு நீரை காரைமடை வழியாக, கோவை, அவனாசி, பல்லடம் பகுதிகளுக்கு விநியோகித்து, வறண்ட பிரதேசமான மேற்படி பகுதிகளுக்கு பாசன வசதிக்கு உதவ சென்னை சர்க்காரை கோரியும், பரம்பிக்குளம் தண்ணீர் பிரச்சினையில் குழப்பம் ஏற்படுத்தாமல், பொள்ளாச்சி, தாராபுரம், பல்லடம் ஆகிய தாலுகா விவசாயிகளிடம் ஒவ்வொருவிதமாகப் பேசி குழப்பம் ஏற்படுத்தாமல், மேற்படி பிரதேசங்களின் விவசாயிகள் பிரதிநிதிகளின் மாநாட்டைக் கூட்டி, வறண்ட பிரதேசங்களுக்கு பரம்பிக்குளம் நீரை சென்னை சர்க்கார் தரவேண்டும். இன்னும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

மாநாட்டின் முடிவில் தாரை தப்பட்டைகளுடன், ஊர்வலம் புறப்பட்டது. நிலச் சீர்திருத்தம், நியாய வாரம், கடன் நிவாரணம், தொழிலாளி, விவசாயி ஒற்றுமை போன்ற கோரிக்கைகளை கோஷங்களாக ஊர்வலத்தினர் முழங்கினர்.

இறுதியில் சூலூர் பஞ்சாயத்து போர்டு எதிர்புறம் உள்ள மைதானத்தில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு பின்பு தோழர் எல். அப்பு குழுவினரின் "எஜமானர்" என்னும் கலை நிகழ்ச்சி நடைபெற்றது. பல்லாயிரக் கணக்கில், சுமார் 80 கிராமங்களிலிருந்து விவசாயிகள் கலந்துகொண்டது குறிப்பிடத்தக்கது.

இந்த மாநாடு சூலூர் பிர்க்கா விவசாயிகளிடையில் பெரிய விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தியுள்ளது. —ந-ரி.

## மலை ஏறும் பெண்கள் கோஷ்டியினர்

### முயற்சியைக் கைவிட்டனர்

காட்மண்டு, அக். 19—

சௌஓயூ என்ற பகுதி நோக்கிச் சென்ற பெண்கள் மலையேறும் கோஷ்டி தங்கள் முயற்சியைக் கைவிட்டனர். கோஷ்டியின் தலைவரும், இதர இரண்டு பேர்களும் மலையேறும்போது இறந்துவிட்டதினால் தான் அக் கோஷ்டியினர் தங்கள் முயற்சியைக் கைவிட்டு மலையடிவாரத்திற்கு வந்துவிட்டதாக நேபாள காரியாலயத்திற்குச் செய்தி கிடைத்துள்ளது. அவர்கள் காட்மண்ட் நோக்கி போகிறார்களா என்பதைக் குறித்து அச்செய்தி ஒன்றும் கூறவில்லை. இறந்தவர்களின் சடலம் இன்னமும் கண்டுபிடிக்கப்படவில்லை என்று அயல்நாட்டு செய்தி ஸ்தாபனம் கூறுகிறது. (பி. டி. ஐ.)

## சென்னையில் நடந்த தி. மு. க. மகாநாடு

### இரண்டு நாள் நிகழ்ச்சிகள்

சென்னை, அக் 20—

சுதந்திர திராவிட நாடு இன்னும் பத்தாண்டுகளில் பெற தி மு. க. பல போராட்ட திட்டங்கள் தீட்டும் என்று திரு. சி. என். அண்ணாதுரை கூறினார்.

சென்னை ஜில்லா தி. மு. க. மகாநாட்டின் இறுதிக் கூட்டத்தில் பேசுகையில் அவர் தனித் திராவிடநாடு கோரிக்கை இதர தென் மாநிலங்களிலும் வலுப்பட்டுவருவதாக கருத்து வெளியிட்டார்.

**மகாநாடு**

அக் 17-18ல் நடந்த மாநாட்டில் திரளான மக்கள் கலந்துகொண்டனர். மாநாட்டுக்கு அனுமதிக் கட்டணம் போட்டு தி. மு. க. நிதி சேர்த்தது. மொத்தம் ரூ. 50 680 மகாநாட்டில் வசூலானதாக அறிவிக்கப் பட்டது. சினிமா நடிகர் திரு. எம். ஜி. ராமச்சந்திரன் ரூ. 5000 கொடுத்தார்.

**சினிமா நடிகரும் தி. மு. க வும்**

சினிமா நட்சத்திரங்களின் பக்க பலத்தைக் கொண்டு தி மு கழகம் இயங்குவதாக சிலர் கூறுவதை திரு. அண்ணாதுரை குறிப்பிட்டார். சினிமா நடிகர்கள் கழகத்தின் கருத்துக்களை, கொள்கைகளை ஆதரித்ததால் அதற்காக கழகத்தை குறை சொல்வது நியாயம் அல்ல. சினிமா நடிகர்களுக்கும் அரசியல் அபிப்பிராயம் வெளியிட உரிமையுண்டு என்று திரு. அண்ணாதுரை கூறினார்.

**சம்பத் உரை**

தி மு. கழக பார்லிமெண்ட் அங்கத்தினர் திரு ஈ. வெ. கி. சம்பத் தமது நீண்ட பேச்சில் தென்னாட்டு வளம் பற்றி சோவியத் அமெரிக்க நிபுணர்களின் கருத்துகளை மேற்கோள்காட்டி திராவிடம் தனித்தியங்க முடியும் என்று கூறினார்.

தென்னாட்டில் தொழிற்சாலைகள் நிறுவ சோவியத் யூனியனும் அமெரிக்காவும் உதவமுன் வந்திருப்பதாகவும், டில்லி சர்க்கார்தான் இதில் அதிக ஊக்கம் காட்டவில்லை என்றும் அவர் கூறினார்.

**நெடுஞ்செழியன்**

தி. மு. க பொதுச்செயலாளர் நெடுஞ்செழியன் பேசுகையில் கேரளத்து நம்பூதிரிபாடும், ஆந்திரத்து சஞ்சீவி ரெட்டியும், கன்னடத்து நிஜலிங்கப்பாவும் வடநாட்டவரைவிட பண்பாடு அதிகம் உடையவர்கள். அவர்களோடு கூட்டு அமைப்பு ஏற்படுத்தி இயங்குவது மிகவும் எளிது என்று கூறினார்.

திரு சி. பி. சிற்றரசு, பி. யு. சண்முகம், மு. கருணாநிதி, ம. வி. நாராயணசாமி, அன்பழகன், எஸ். எஸ். ராஜேந்திரன், எம். ஜி. ராமச்சந்திரன் மற்றும் பலர் மகாநாட்டில் பேசினர்.

**தீர்மானங்கள்**

இலங்கை பிரதமர் திரு. பண்டாரநாயகா, ம. கி. ஷண்முகம், டாக்டர் தருமாம்பாள், டி. என். ஜி அண்ணாமலை ஆகியோர் மரணத்திற்கு அனுதாப தீர்மானங்கள் மகாநாட்டில் நிறைவேறின.

பக்கிங்ஹாம் கால்வாயை ஆழப்படுத்தல், வட சென்னையில் கடல் அரிப்பைத் தடுத்தல், சென்னை—அரக்கோணம், தாம்பரம்-விழுப்புரம் ஆகிய மார்க்கங்களில் மின்சார ரயில் பாதை ஏற்படுத்தல், கைத்தறித் தொழில் வளர்ச்சிக்கு நிரந்தரப் பாதுகாப்பு ஆகியவற்றை வற்புறுத்தி தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

திரு. கே. எம். கண்ணபிரான் நன்றிகூற மாநாடு முடிவுற்றது.

## ஜப்பானிடம் மொரார்ஜி காவடி

### இந்திய திட்டங்களுக்குக் கடன் யாசகம்

டோக்யோ, அக். 19—

இந்தியாவின் திட்டங்களுக்கு ஜப்பானிடம் மேற்கொண்டு கடனை இந்திய நிதி மந்திரி மொரார்ஜி கேட்பதாக ஜப்பானிய நிதி இலாகாவின் பிரதிநிதி அறிவித்தார்.

ஜப்பான் ஏற்கனவே 24 கோடி ரூபாய் கடன் வசதி கொடுக்கச் சம்மதித்துள்ளது அந்தக் கடன் தொகையைக் கூடுதலாக்குமாறு ஜப்பான் நிதி மந்திரியை இந்திய நிதிமந்திரி கேட்டுக்கொண்டார். 24 கோடி ரூபாய் மதிப்புள்ள யென் நாணய கடனே இந்தியாவினால் இன்னும் பயன்படுத்தப் படாதிருக்கிறதென்பதை ஜப்பான் நிதி மந்திரி சுட்டிக் காட்டினார். மின்சார உற்பத்தி யந்திரங்கள், கப்பல்கள் இவற்றிற்கு அடுத்த ஆறு மாதங்களுக்குள் இந்த 24 கோடி ரூபாய் கடன் வசதியும் உபயோகிக்கப்பட்டுவிடுமென்று மொரார்ஜி பதில் அளித்தார். என்றும் ஜப்பானிய நிதி இலாகா பிரதிநிதி அறிவித்தார்.

மொரார்ஜி தேசாய் ஜப்பானிய சக்கரவர்த்தியையும் பிரதமரையும் சர்வதேச வர்த்தக மந்திரியையும் சந்தித்தார். (ராய்ட்டர்)

## பாதுகாப்பு சபை விஸ்தரிப்பு முயற்சி

ஐக்கிய நாடுகள், அக் 19—

ஐக்கிய நாட்டு பாதுகாப்பு சபையையும் பொருளாதார சமூக கவுன்சிலையும், விஸ்தரிக்க வேண்டுமென்று ஆசிய நாடுகள் சமர்ப்பித்துள்ள திட்டத்தை ஆலோசிக்க சோவியத் யூனியன் ஒரு நிபந்தனை விதித்துள்ளது. ஐ. நா வில் மக்கள் சீனா இடம் பெறும் வரையில் இந்தப் பிரச்சினையை ஆலோசிக்க முடியாதென்று சோவியத் யூனியன் அறிவித்து விட்டது.

ஆகவே இந்தப் பிரச்சினை இப்பொழுது ஆலோசனைக்கு வராது.

பாதுகாப்பு சபையில் ஜப்பானின் பதவி காலம் காலாவதி ஆவதால், புது உறுப்பினர் நாட்டைத் தேர்ந்தெடுக்கும் பிரச்சினை நவம்பர் 2ந்தேதி வரை ஒத்தி வைக்கப்பட்டது.

போலந்து, துருக்கி இவ்விரு நாடுகளின் போட்டியில் ஆறு தடவையும் ஒரு திட்டமான முடிவு ஏற்படவில்லை. ஆகவே பிரச்சினை நவம்பர் 2-ந் தேதி வரை ஒத்திவைக்கப்பட்டது.

## ஆசிரியருக்குக் கடிதங்கள்

### கன்யாகுமரி மாவட்ட கலெக்டரின் கவனத்திற்கு

ஐயா,

செந்நெல்லும், செங்கரும்பும் கற்பகத் தருவும் செழித்த செந்தமிழ் திருநாட்டில் அரிசி விலை ஆகவனை நோக்கி பாயும் ராக்கெட்டாகவும், சர்க்கரை விலை சந்திர மண்டலம் நோக்கி விரையும் லூனிக்காகவும் இருக்கிறது.

தங்கநிற நெல்மணிகளை முத்து முத்தாகக் கொத்து, கொத்தாக அறுவடை செய்யும் நாஞ்சில் நாட்டில் இந்நேரத்தில் படி அரிசி விலை ரூ 1-2-0 ரூ 1-3-0 ஆக இருக்கிறது

தோவாளை தாலுகாவின் தலைநகரான பூதப்பாண்டியில் உத்தியோகஸ்தர்கள் பலரும் ஓட்டல்களை நம்பி வாழ்பவர்கள். மற்றும், விவசாயி, தொழிலாளி; நடுத்தர மக்கள் யாவரும் விலைவாசியால் வயிற்றைக் கட்டித் தேவையைச் சுருக்கி வாழ்கிறார்கள் துன்பப் படுகிறார்கள். இங்கே இதுவரையிலும் அரசாங்கம் நியாய விலைக் கடைகள் திறந்ததில்லை. குறிப்பாக தோவாளை தாலுகா பூராவிலும் சர்க்கரை நியாய விலையில் கிடைக்கவில்லை எனவே பூதப்பாண்டியில் அரிசியும், சர்க்கரையும் நியாய விலையில் கிடைக்க, நியாய விலைக் கடைகள் திறக்க உடனடி நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்

உண்டி விலையைக்குறைத்தார்—
உயிர் கொடுத்தார்
வயிற்றுக்குச் சோறிடவேண்டும்—
இங்கு வாழும் மக்களுக்கெல்லாம்

பூதை செ. அண்ணாமலை
பூதப்பாண்டி.

### பகிரங்கமாக சூதாட்டம்!

ஐயா,

திருப்பத்தூர் நகரசபை தினசரி மார்க்கெட் அருகில் 4 வாரங்களாக சூதாட்டம் நடக்கிறது. சூதாடிகள் கூட்டம் ஒரு ரூபாய் வைத்தால் 8 ரூபாய் கிடைக்குமென்று பொதுமக்களை மயக்கிய பல்லாயிரம் ரூபாயை ஏழைத் தொழிலாளரும் விவசாயிகளும் இழந்துவிட்டனர்.

நகர போலீசாரிடம் புகார் செய்வதால் பயனில்லை. போலீஸ் டிப்டி சூப்ரண்டெண்டும், சப் கலெக்டரும் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

கே. கிருஷ்ணசாமி
திருப்பத்தூர்.

### பேயனூத்து கால்வாயை மராமத்து செய்க

ஐயா,

திருச்சி ஜில்லா திருமயம் தாலுகாவில் இலிருப்பிச்சி கிராமத்தில் பேயனூத்து கால்வாய் இருக்கிறது அதற்கு 150 ஏக்கர் பாயக்கூடிய நீர்வளம் இருப்பதாக இஞ்ஜினியர் கூறினார். மேற்படி கால்வாயை வெட்டி மராமத்து செய்து கொடுத்தால் பெரியகுள கண்மாய், வடவாக் கண்மாய் இரண்டிலும் சுமார் 500 ஏக்கர்வரை இருபோக சாகுபடி செய்ய முடியும்.

அதோடு, எங்கள் கிராமத்திற்கு குடிதண்ணீர் வசதியுமில்லை. சாலைகள் இல்லை; மின்சார விளக்குகளில்லை. எங்கள் தொகுதி எம். எல். ஏ.வான மின்சார மந்திரி இக் குறைகளைக் கவனிப்பாரா?

வி. சுப்பையா
இலிருப்பிச்சி
விவசாய சங்கச் செயலாளர்

# கரும்பு விலை உயரவில்லை சர்க்கரை விலை உயர்வது ஏன்?

# கொலைகாரன் கொடுவாளுக்கு இரையான தியாகி வெங்கடாசலத்திற்கு மக்களின் அஞ்சலி

## ஒட்டன்சத்திரத்தில் பூரணஹர்த்தால்

பழனி, அக். 15—

தோழர் எம். ஏ. வெங்கடாசலம் குத்தப்பட்டு படுகொலை செய்யப்பட்டதும் இது சம்பந்தமாக சின்னசாமி, பொன்னுசாமி என்ற இருவர் கைது செய்யப்பட்டதும் வாசகர்கள் அறிந்ததே. மதுரை ஜில்லா போலீஸ் சூப்ரடெண்ட், பழனி போலீஸ் டிப்டி சூப்ரடெண்ட், ஒட்டன்சத்திரம் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் மூவரும் புலன் விசாரணை செய்து வருகின்றனர்.

இந்த பிரதேசம் முழுவதும் பலத்த போலீஸ் பந்தோபஸ்து செய்துள்ளார்கள். தோழர் வெங்கடாசலம் குத்தப்பட்டு மரணமடைந்தார் என்ற செய்தி கேட்டவுடன் ஒட்டன்சத்திரம் பிரதேசத்திலிருந்தும், தாலுகா முழுவதிலுமிருந்தும், ஆயிரக்கணக்கான பேர்கள் பழனி சர்க்கார் ஆஸ்பத்திரிக்கு வந்து கண்ணீர் விட்டு கதறி அழுதனர். இரவு முழுதும் தூங்காமல் ஆஸ்பத்திரியிலேயே உட்கார்ந்து கொண்டு அழுதுகொண்டேயிருந்தனர். செய்தி போன் மூலமாக தெரிந்தவுடன் மதுரையிலிருந்து தோழர் ஏ. பி. பழனிச்சாமி அவர்களும், உடுமலை தாலுகா தாமோதரன் முதலியவர்கள் பழனிக்கு வந்து விட்டனர்.

காவளப்பட்டியிலிருந்து தோழர் ஆர். காமராஜ் அவர்கள் தகவல் கிடைத்தவுடனே ஆஸ்பத்திரிக்கு வந்து சேர்ந்தார். 10-ந்தேதி காலையில் பழனியில் மௌன ஊர்வலம் நடத்தப்பட்டது.

### ஹர்த்தால்

அக். 10ந் தேதி காலையில் பிரேதம் பரிசோதனை செய்யப்பட்ட பின், கார் மூலமாக ஒட்டன்சத்திரம் கொண்டுவரப்பட்டு, மாட்டு வண்டியில் வைத்து, மக்களே இழுத்துச் செல்ல 1½ மைல் தூரம் நெடுக பல்லாயிரக் கணக்கான மக்கள் கதறி அழுதுகொண்டே அத்திக்கோம்பை வந்தனர். அங்கு அவருடைய தோட்டத்தில் சவ அடக்கம் செய்யப் பட்டது. பிரேதம் ஒட்டன்சத்திரம் வந்த போது பூரண ஹர்த்தால் செய்து வியாபாரிகள் கடைகளை அடைத்து தங்கள் அனுதாபத்தை தெரிவித்துக்கொண்டனர்.

பிரேத அடக்கத்திற்கு முன்பாக கம்யூனிஸ்டுக் கட்சியின் தலைவர்கள் என். கிருஷ்ணசாமி, என். வரதராசன், எம். என். ஆதிநாராயணன், ஆர். ராமராஜ், வி. ஏ. கருப்புசாமி, தி.மு.க. ரங்கசாமி, தமிழரசு கழகம் மாரிமுத்து, கரூர் ராமசாமி ஆகியவர்கள், வெங்கடாசலத்தின் சேவை தியாகம், வாழ்க்கை வரலாறுகளைக் குறிப்பிட்டுப் பேசி இறுதி வணக்கத்தை தெரிவித்தும, கொலைகாரர்களின் செயலை கண்டித்தும் பேசினார்கள்.

கம்யூனிஸ்ட் தலைவர்கள் வி. மதனகோபால், கே. டி. கே. தங்கமணி எம்.பி., கே. டி. ராஜு, எம். ரத்தினம், ஆர். கோவிந்தன், திண்டுக்கல் எஸ். ஏ. தங்கராஜ் மற்றும் பல வெளியூர் தோழர்கள் தோழர் வெங்கடாசலத்தின் சமாதிக்குச் சென்று அஞ்சலி செலுத்திவிட்டு அவரது குடும்பத்திற்கு கணவன் பிரிவால் ஆறு துயரத்தில் அழுது துடித்துக் கொண்டிருக்கும் அவருடைய மனைவி செங்கமலத்திற்கு ஆறுதல் கூறிச் சென்றார்கள். தினசரி நூற்றுக் கணக்கான மக்கள் வந்து தங்கள் அஞ்சலியை செலுத்தி போகிறார்கள்.

### தோழர் எம்.ஏ. வெங்கடாசலத்தின் வாழ்க்கை வரலாறு

பழனி தாலுகா அத்திக்கோம்பையில் நடுத்தரமான விவசாய குடும்பத்தில் பிறந்தார். சாகும் போது வயது 36. இவருடைய மனைவிக்கு வயது 28. 10 வயதிலும், 5 வயதிலும், இரண்டு பெண் குழந்தைகளும், 1½ வயதில் ஒரு ஆண் குழந்தையும் இருக்கிறது.

1939 வரை காங்கிரஸிலிருந்தார். யுத்த எதிர்ப்பு நடவடிக்கையில் ஈடுபட்டார். 1942-ல் 15 நாள் தண்டனைபெற்று சிறை சென்றார்.

1940-ல் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தார். 1946 லிருந்து விவசாய சங்க வேலைகளில் தீவிரமாக ஈடுபட்டு வந்தார். 1948 லிருந்து 1951 வரை காங்கிரஸ் ஆட்சியின் அடக்குமுறைக்கு ஆளானார். பல வழக்குகள் போட்டனர். குடும்பம் பாதிக்கப்பட்டது. தனக்கிருந்த நிலங்களை விற்று செலவழித்து வழக்குகளிலிருந்து மீண்டார். 1948 லிருந்து பழனி தாலுகா கமிட்டி அங்கத்தினராக இருந்தார்; 1953, 54-ல் பஞ்ச எதிர்ப்பு இயக்கத்தில் தீவிரமாக பங்கு கொண்டார். 1955 லிருந்து அத்திக்கோம்பை பஞ்சாயத்து தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டு பணியாற்றி வந்தார். 1956-ல் சந்தை கண்ட்ராக்ட்தாரர்களின் அக்ரம வசூலை எதிர்க்கும் போராட்டத்தில் ஈடுபட்டார். 1957-ல் வடகாடு விவசாய சங்கத்தை ஆரம்பிப்பதில் முன் நின்றார். மாகாண பஞ்சாயத்து தலைவர்கள் மகாநாட்டில் பழனி தாலுகாவின் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். தேவிகுளம், தூத்துக்குடி, புதுவை ராஜ்ய உபதேர்தல்களில் பங்கெடுத்துக் கொண்டு வேலை செய்தார். 1958-ல் மதுரை ஜில்லா கவுன்சில அங்கத்தினராகவும், 1959-ல் ஜில்லா விவசாய சங்க நிர்வாகக் கமிட்டி மெம்பராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். தொடர்ந்து தேசத்திற்காகவும், மக்களுக்காகவும், 20 வருஷ காலமாக சேவை செய்து வந்துள்ளார்.

(ச ரி)

## விவசாயிகள் மீது ஜாமீன் வழக்குகளை வாபஸ் செய்ய வேண்டும்

### பேத்துவார விவசாயிகளுக்கு கூலி நிர்ணயம் அவசியம்

ஸ்ரீவைகுண்டம், அக். 16—

இவ்வூருக்கு அருகில் உள்ள வெள்ள மடத்தைச் சேர்ந்த கொமாந்த நகர் என்னும் கிராமத்தில் விவசாய சங்கக் கூட்டம் தோழர் துரைசாமி நாடார் தலைமையில் நடைபெற்றது.

நாங்குநேரி தோழர் வி எஸ். காந்தி, சர்க்காரின் உணவுக் கொள்கையைக் கண்டித்துப் பேசினார். சாத்தான்குளம் எஸ். வெள்ளைச்சாமியும் பின்னர் பேசினார்.

கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேறின.

ஆறுமுகமங்கல விவசாயிகளை ஜாமீன் வழக்குகள் போட்டு, அலைக்கழிப்பதை நிறுத்தி அவர்கள் மீது போடப்பட்டிருக்கும் ஜாமீன் வழக்குகளை உடனடியாக வாபஸ் வாங்கவேண்டும்.

பேத்துவார விவசாயிகளுக்கும் கூலி நிர்ணயம் செய்து சட்ட மூலமாகப் பாதுகாப்பு அளிக்க வேண்டும்.

பத்து ஏக்கருக்கு மேல் நிலம் வைத்திருப்பவர்களிடம், நெல் கட்டாயக் கொள்முதல் செய்ய வேண்டும் என்றும், சர்க்கார் 5 லட்சம் டன் நெல் எப்போதும் கையிருப்பில் வைத்துக் கொள்ள வேண்டும் என்றும். 500 பேர் கொண்ட ஜனப்பகுதிக்கு ஒரு நியாயவிலைக்கடை திறக்கப்பட வேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

## சென்னை சர்க்கார் சிப்பந்திகள் பிராந்தியக் கூட்டம்

### ஒற்றுமையை வலியுறுத்தி பலர் பிரசங்கம்

சென்னை, அக். 15—

சர்க்கார் சிப்பந்திகள் பிராந்தியக் கூட்டம் சென்னை பிராந்தியத் தலைவர் பி. பாண்டித்துரை பி.ஏ. பி. எல். தலைமையில் அக். 14ந் தேதியன்று மாலை 5 மணிக்கு சேப்பாக்கத்தில் நடைபெற்றது.

கபாலி எல்லோரையும் வரவேற்றுப் பேசினார். ஒரு நெருக்கடியான சந்தர்ப்பத்தில் இந்த கூட்டம் கூட்டப்படுகிறது என்றும், இந்த நேரத்தில் ஊழியர்கள் மத்தியில் உள்ள ஒற்றுமையும், மக்கள் ஊழியர்கள் பால் காட்டும் அனுதாபமும் ஆகியவற்றின்மூலமதான் பிரச்சினைகளைத் தீர்வு காண முடியும் என்றார்.

### சர்க்கார் சிப்பந்திகள் மத்தியில் அதிருப்தி

மத்திய அரசாங்க. மாகாண அரசாங்க சிப்பந்திகள் சம்பளத்தில் இருக்கும் ஏற்றத் தாழ்வு ஏற்றுகொள்ளப்பட வேண்டும் என்று மத்திய சம்பளக் கமிஷன் குறிப்பிட்டுள்ளது என்று பத்திரிகைகளில் வெளி வந்துள்ள செய்தி சர்க்கார் சிப்பந்திகள் மத்தியில் பரபரப்பை உண்டு பண்ணியிருக்கிறது என்றார்.

பிரதம மந்திரி சோஷலிசம் பேசுகிறவர், அவர் இந்த அநியாயச் செயலுக்கு உடன்படக் கூடாது என்று கேட்டுக்கொண்டார்.

தலைவர் பாண்டித்துரை பேசும் போது, இப்போது விலைவாசி உயர்வு ஏற்பட்டுள்ள இந்த சந்தர்ப்பத்தில் ஏற்பட்ட சம்பள வெட்டும், சர்க்கார் சிப்பந்திகளின் கோரிக்கை விஷயத்தில் சர்க்கார் பாராமுகமாக இருப்பதும் சிப்பந்திகள்மத்தியில அதிருப்தியை உண்டுபண்ணியிருக்கிறது. சர்வகலாசாலை சிப்பந்திகள் கோரிக்கைகள் பற்றிக் குறிப்பிட்டுவிட்டு, அவர்களின் போராட்டத்திற்கு சர்க்கார் சிப்பந்திகளின முழு ஆதரவு உண்டு என்று தெரிவித்தார்.

### அரசியல் சட்டத்தில் உள்ளதைப் பின்பற்றுக

காரியதரிசி கிருஷ்ணமூர்த்தி பேசுகையில், மத்திய சம்பளக் கமிஷன் சிபார்சு பற்றிக் குறிப்பிட்டு, சமவேலைக்குச் சம சம்பளம என்ற முறையில் : சம்பளம் கொடுக்கப்படவேண்டும என்று அரசியல் சட்டத்தில் கண்டுள்ளது. அந்த முறையை அரசாங்கம பின்பற்ற வேண்டுமென்றார்.

ஆர். சந்தானம், கிருஷ்ணன், தமிழ்நாடு சர்க்கார் சிப்பந்திகள் சங்க உபதலைவர் எல். வி ராமசாமி ஆகியோர்கள் பேசினார்கள்.

சர்வகலாசாலை ஊழியர் போராட்டத்தை ஆதரித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது

## மடத்துக்குளம் விவசாயிகளின் குறைகள்

### கலெக்டருக்கு மகஜர்

உடுமலை, அக். 15—

கோவை ஜில்லா விவசாயிகள் சங்க உபதலைவர் ஜி. அழகுமுத்து சுப்பாராயன், மடத்துக்குளம் பிர்க்கா விவசாயிகள் சங்கக் காரியதரிசி எம். எஸ். உஸ்மான், உபதலைவர் ஏ. அப்பன், கே. பழனிசாமி ஆகியோர் தலைமையில் உடுமலை தாலுகா மடத்துக்குளம் பிர்க்கா குத்தகை விவசாயிகள் 150 பேர் ஒரு மகஜரை கோவை ஜில்லா கலெக்டரிடம் சமர்ப்பித்தனர். அந்த மகஜரில் கண்ட விஷயங்கள் வருமாறு :

சல்பேட் அமோனிய உப்பு தாமதமின்றி விவசாயிகளுக்குச் சப்ளை செய்யப்படவேண்டும்.

புதிய அமராவதி வாய்க்கால் ஆயக்கட்டு நிலங்களை நஞ்சை, புஞ்சை என இரண்டு தரமாகப் பிரித்து தீர்வை விதிக்கவேண்டும்.

பட்டாதாரர்கள் நேரடியாக குத்தகை நெல் வாங்கிக் கொள்ளாமல் கோர்ட்டில் கலெக்டரின் நிர்ணய விலைப்படி வாங்கிக் கொள்ள முயற்சி செய்து பல வழக்குகள் கோர்ட்டில் போடப்படுகின்றன. இதைத் தடுக்கவேண்டும்.

குத்தகைதாரரை வெளியேற்றுவது, போலீஸ் தலையீடு முதலியன தடுக்கப்படவேண்டும்.

நியாய வாரத்தை அந்தந்த தாலுகா தாசில்தார், பட்டாதார், சாகுபடிதாரர்களைக் கூட்டி ஒப்பந்தம் மூலம் நிர்ணயிக்க வேண்டும்.

## பாத்திரத் தொழிலாளர் கோரிக்கை

ஸ்ரீ வைகுண்டம், அக். 14—

இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் ஸ்ரீவைகுண்டம் தாலுகா கமிட்டிக் கூட்டம் கடந்த ஞாயிற்றுக்கிழமை நடந்தது. நெல்லை ஜில்லா கமிட்டி தோழர் டி. ஆர். சுப்பிரமணியம் கலந்து கொண்டார்.

ஏரல் பாத்திரத் தொழிலாளர்கள் மிகவும் குறைந்த கூலி பெற்று வேலை செய்துவருகிறார்கள். அவர்களுக்கு தச்சநல்லூர், சங்கரன்கோவில், திருநெல்வேலி முதலிய இடங்களில் பாத்திரத் தொழிலாளர்கள் பெறும் ஊதியம் கிடைக்க வேண்டுமென்பதற்காக ஏரல் பாத்திரத் தொழிலாளர்கள் போராட்டம் நடத்துவதைத் தாலுகா கமிட்டி அங்கீகரித்தது



கடந்த 9-ம் தேதியன்று ஒட்டன்சத்திரத்தில் சில மிலேச்சர்களால் அரசியல் விரோதம் காரணமாகக் குத்திப் படுகொலை செய்யப்பட்ட தோழர் எம். ஏ. வெங்கடாசலம். (உயிர்துறந்த சமயத்தில் எடுக்கப்பட்ட படம்)

## நீலகிரி மாவட்டச்செய்திகள்

### குன்னூர்

குன்னூர், அக். 15—

சுவிட்சர்லாந்து சென்று திரும்பிய நீலகிரித் தோட்டத் தொழிலாளர் சங்கக் காரியதரிசி எஸ் எம் நாராயணனுக்கு ஒரு வரவேற்பு வழங்கப்பட்டது. கூட்டத்திற்கு வக்கீல் ஜி. சிவராஜ் தலைமை வகித்தார்.

எஸ். எம் நாராயணன் ஒரு காங்கிரஸ்காரர் என்பது குறிப்பிடத் தக்கது

எஸ். எம். நாராயணன் பேசும் போது சுவிட்சர்லாந்தில் இருக்கும் எம். ஆர். ஏ ஸ்தாபனம் கம்யூனிஸ்ட் எதிர்ப்பு ஸ்தாபனம் என்றும், இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையை அந்த ஸ்தாபனத்தார் கண்டித்துப் பேசுகின்றனர் என்றும் கூறினார் மேலும் அவர் பேசுகையில் அங்கு இந்தியர் யாரையும் அனுப்பாமல் இருப்பது நல்லது என்றார் எஸ். எம். நாராயணன் ஒரு காங்கிரஸ்காரர் என்பது குறிப்பிடத் தக்கது.

### எமரால்ட் அணை

குந்தாத்திட்ட எமரால்ட் அணைக்கட்டில் நடைபெற்ற போராட்டம் சம்பந்தமாய் 7-10-59 அன்று கன்சிலியேஷன் அதிகாரி முன் கன்ராக்டர்கள் கை ஒப்பமிட மறுத்தனர் அல்லவா? 8-10-59 அன்று திரும்பவும் அவர்கள் தொழிலாளருக்கு வேலை கொடுத்தனர். அணைக்கட்டு வேலை சமுகமான முறையில் நடைபெறுகிறது.

### ரெயில்வே தொழிலாளர் சங்கக் கூட்டம் குன்னூர்

இன்று மாலை 4 மணிக்கு குன்னூர் ரெயில்வேத் தொழிலாளர் சங்கப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் திரு. அனந்தநம்பியார் கலந்துகொண்டார். பஞ்சப்படி சம்பளவிகிதத்தோடு சேர்க்கப்பட வேண்டும் என்று குறிப்பிட்டார்.

மேலும், உணவு விலைவாசி உயர்வைக் குறிப்பிட்டு சர்க்காரின் போக்கைக் கண்டித்தார். கூட்டத்தில் கோவிந்தன், அச்சுதன் ஆகியவர்கள் பேசினார்கள்.

## தகராறுகளை டிரிபியூனலுக்கு விடுவதினால் காலதாமதம் ஏற்படுகிறது

### பஞ்சப்படியை குறைக்கக்கூடாது

#### பாங்க் ஊழியர்கள் மகாநாட்டில் பிரபாத்கர் பேச்சு

கோயம்புத்தூர், அக் 19—

அகில இந்திய பாங்க் ஊழியர் சங்கத் தலைவர் பிரபாத்கர் இன்று இங்கு பேசும்போது, பாங்க் தொழிலில் நிருவாகத்தினருக்கும் ஊழியர்களுக்குமிடையே தகராறுகளை நேரடியாகப் பேசித் தீர்த்துக்கொள்ள வேண்டும்; அது வெற்றி அளிக்காவிட்டால் மத்தியஸ்தத்திற்கு விட்டுவிட வேண்டுமென்றார்.

ஜில்லா பாங்க் ஊழியர்களிடையே பேசும்போது அவர் மேலும் கூறியதாவது:

தேசிய டிரிபியூனலுக்கு தகராறுகளை விடுவதை தாங்கள் எதிர்ப்பதாகக் கூறினார். இம்முறையில் தங்களின் குறைகளை தீர்ப்பதில் தேவையற்ற தாமதம் ஏற்படுவதுதான் இதற்குக் காரணமென்று அவர் கூறினார்.

தாங்கள் நினைத்துள்ள பஞ்சப்படி குறைப்பை அமுல் நடத்த வேண்டாமென்று பாங்க் நிருவாகிகளைக் கேட்டுக் கொண்டார். வாழ்க்கைத்தரம், விலைவாசி உயர்வுக்கேற்றவாறு இல்லை என்றும் அவர் கூறினார்.

—பி.டி.ஐ.

## கல்லுடைக்கும் தொழிலாளர் மீது போலீசார் தடியடிப் பிரயோகம்

டேராடூன் அக் 18—

நேற்றிரவு இங்கு சுண்ணாம்புக்கல் உடைக்கும் தொழிலாளர்களின் ஊர்வலம் ஒன்றின் மீது போலீஸார் தடியடிப் பிரயோகம் செய்தனர். அதன் காரணமாக 6 தொழிலாளர்கள் காயமடைந்தனர் என்று பி. டி ஐ செய்தி ஒன்று கூறுகிறது,

டேராடூன் ஜில்லா மாஜிஸ்ட்ரேட் வெளியிட்டுள்ள அறிக்கையில். கலைந்து போகும்படி அதிகாரிகள் விடுத்த உத்திரவைத் தொழிலாளர்கள்மீறினார்களென்றும், அவர்கள் போலீசார்மீது கல்லெறிந்தார்களென்றும் அதனால்தான் தடியடிப் பிரயோகம் நடைபெற்றது என்றும் சமாதானம் கூறியுள்ளார்.

சுமார் 200 கல்லுடைக்கும் தொழிலாளிகள், தங்கள் கோரிக்கைகளை நிர்வாகத்தினர் நிறைவேற்றி வைக்கவேண்டும் என்று கோரி நடத்திய ஊர்வலத்தின் மீதே மேலே குறிப்பிட்ட தடியடிப் பிரயோகம் நடந்துள்ளது. தடியடிக்கு முன்னால் அத் தொழிலாளர்கள், பல குவாரிகளின் சொந்தக்காரர்களின் வீடுகளுக்கு ஊர்வலமாகச் சென்று தங்கள் கோரிக்கை சாஸனத்தைச் சமர்ப்பித்தனர்.

குவாரி தொழிலாளர் தலைவர்கள் இருவரையும் போலீசார் கைது செய்துள்ளனர்.

(டேராடூன் நேருவின் மாகாணமாகிய உத்திரப்பிரதேசத்தைச் சேர்ந்த நகரம்.)

# கோவை நகரசபைத் தலைவர் பூபதிக்கு பேரூர் ஊராட்சி மன்ற வரவேற்பு

பேரூர், அக். 18—

பேரூர் (கோவை) ஊராட்சி மன்றத்தின் சார்பில் கோவை நகரசபைத் தலைவர் தோழர் எம் பூபதிக்கு 13-10-59ல் சிறப்பான தோர் வரவேற்பளிக்கப்பட்டது

திரு. ரா. பெருமாள்சாமி அனைவரையும் வரவேற்றார். விழாவிற்கு பேரூர் ஊராட்சி மன்றத் தலைவர் திரு பி. ஏ. நஞ்சப்பன் தலைமை தாங்கினார்.

வரவேற்புக்குத் தோழர் பூபதி தக்க முறையில் பதிலளித்தார். அவர் தமது நன்றியுரையில் ஊராட்சி மன்றத்தின் பொறுப்புகள் நிர்வாகம் பற்றிக் குறிப்பிட்டார்.

இந்நிகழ்ச்சியில் தோழர் மருதாசலம் எம். எல். ஏ.யும் கலந்துகொண்டு விழாவினைச் சிறப்பித்தார்.

திரு. பி. ஏ. நஞ்சப்பன் நன்றி தெரிவித்த பின் நாட்டு வாழ்த்துடன் விழா இனிது முடிவுற்றது

## கம்யூனிஸ்ட் எதிர்ப்புக் கூட்டணி முற்போக்கானதாக இல்லை

### மன்னம் குறை கூறுகிறார்

திருவனந்தபுரம், அக். 20—

கேரள இடைத் தேர்தலுக்காக ஏற்பட்டுள்ள கம்யூனிஸ்டு எதிர்ப்பு சந்தர்ப்பவாதக் கூட்டணி முற்போக்கானதாகவும், தெளிவானதாகவும் இல்லை என்று கேரள கலவரத் தலைவர் மன்னத்து பத்மநாபன் நேற்று அபிப்பிராயம் தெரிவித்தார்.

"காங்கிரஸ், பி. சோ. கட்சி. முஸ்லிம் லீக் ஆகிய கட்சிகளிடையே ஏற்பட்டுள்ள தேர்தல் உடன்பாடுகளை உடைக்க விரும்பாவிட்டாலும், அக்கட்சித் தலைவர்களை ஒன்று கூட்டி, இன்று கூட்டணியிலுள்ள குறைகளைப் போக்கவேண்டும்" என்றும் கூறினார்.

எல்லா கட்சித் தலைவர்களையும் தாம் சந்திக்கப் போவதாகவும், வருகின்ற தேர்தலில் கம்யூனிஸ்டுக் கட்சியை ஒழிப்பது என்ற லட்சியத்தை அவைகள் ஒப்புக் கொள்ளும் என்று தாம் கருதுவதாகவும் கூறினார்.

கம்யூனிஸ்டுக் கட்சிக்கு விரோதமாக எல்லா கட்சிகளும் கூட்டுச் சேர்ந்து தேர்தலில் போட்டியிடும் என்று வாக்குறுதியை கேரள மக்களுக்கு அளிக்க முடியுமா என்று ஒரு நிருபர் கேட்ட கேள்விக்கு "கம்யூனிஸ்டு அல்லாத கட்சிகள் கூட்டுச் சேருவதற்கு முழுமுயற்சி செய்வேன்" என்று கூறினார். விமோசன சமர சமிதி தொடர்ந்து இயங்குவதையோ, கட்சியாக உருமாறுவதையோ தாம் விரும்பவில்லை யென்றும் கூறினார்.

## நகராட்சி மன்றத் தலைவராக கம்யூனிஸ்ட் தோழர் வெற்றி

எலுரு, அக். 20—

எலுரு நகராட்சி மன்றத் தலைவருக்கு நடைபெற்ற தேர்தலில் கம்யூனிஸ்டு ஆட்சியின் சார்பில் நிறுத்தப்பட்ட தோழர் தர்மராஜு வெங்கட்டராவ் வெற்றிவாகை சூடினார்.

தோழர் தர்மராஜுவிற்கு 17 வாக்குகளும், அவரை எதிர்த்துப் போட்டியிட்ட காங்கிரஸ்காரருக்கு 13 வாக்குகளும் கிடைத்தன. தேர்தல் முடிவை எதிர்பார்த்து மன்றத்திற்கு வெளியே கூடியிருந்த ஜனசமுத்திரம் தோழர் தர்மராஜ் வெற்றிபெற்றார் என்று அறிவித்தவுடனே ஆனந்த ஆரவாரம் செய்தது.

## நவம்பரில் போராட சேலம் ஜி. கூ. முடிவு

சேலம், அக. 18—

விலைவாசி உயர்வைத் தடுக்க சர்க்கார் நடவடிக்கை எடுக்கத் தவறினால் சேலம் ஜில்லாவில் உள்ள ஜனநாயக சக்திகளைத் திரட்டி நவம்பரில் போராட்டம் நடத்துவதென்று இந்திய கம்யூனிஸ்ட்கட்சியின் சேலம் ஜில்லா நிர்வாககமிட்டி முடிவு செய்தது. தோழர் ஜி சாமுவேல் மாகாண கவுன்சில முடிவுகளை விளக்கிப் பேசினார்.

### பேரவை முடிவு

சேலம் நகர கம்யூனிஸ்ட் கட்சிக் கிளைப் பேரவைக் கூட்டமும் 16ந் தேதி நடந்தது. பின்வரும் தீர்மானம் நிறைவேறியது :—

(1) முனிசிபல் நகரங்களிலும், மேஜர் பஞ்சாயத்து போர்டுகள் உள்ள நகரங்களிலும் 500 குடும்பங்களுக்கு ஒரு நியாய விலைக் கடை வீதம் திறக்க,

(2) மானாவாரி பிரதேசங்கள், மற்றும் தேவையான இடங்களில் நியாயவிலைக் கடைகளை ஏற்படுத்த,

(3) நியாயவிலைக் கடைகள் உள்ள பகுதிகளில் மக்கள் கமிட்டிகள் அமைக்கப்பட்டு வினியோகத்தை ஒழுங்கு செய்ய,

(4) குடும்பங்களில் நபர் எண்ணிக்கை கணக்கிடப்பட்டு அடையாள கார்டுகள் தரப்படவேண்டும். தினசரியோ வாரத்திற்கொருமுறையோ வாங்கிக்கொள்ளும் அடிப்படையில் நிர்ணயம் செய்ய,

(5) நாற்றமில்லாத நல்ல அரிசி பக்கா (படி) 12 அணாவுக்கு வழங்க புன்செய் தானியங்கள் ரூபாய்க்கு 8 பக்கா வீதம் வழங்க,

(6) சர்க்கரை விலையைக் கட்டுப்படுத்தி—நியாயவிலைக் கடையில் அந்தஸ்து பிரச்சினை இன்றி அடையாள கார்டுகள் வழங்கப்பட்டு சர்க்கரை எல்லோருக்கும் கிடைக்க ராஜ்ய சர்க்கார் உடனடியாக ஏற்பாடு செய்ய வேண்டும்.

மக்களை மிகப் பெரிய அளவு பாதித்துள்ள இப் பிரச்சினைகள் சம்பந்தமாக சர்க்கார் மேலே கண்ட கோரிக்கைகளை நிறைவேற்றத் தவறினால் சேலம் ஜில்லாவில் உள்ள ஜனநாயக சக்திகளை திரட்டி மக்கள் ஆதரவுடன் நவம்பர் மாதத்தில் போராட்டம் நடத்த வேண்டிய அவசியம் ஏற்படும் என இப் பேரவைக்கூட்டம் ராஜ்ய சர்க்காருக்கும் சேலம் ஜில்லா கலெக்டருக்கும் தெரிவித்துக் கொள்கிறது.

### திண்டிவனம்

11ந் தேதி கம்யூனிஸ்ட் கட்சி திண்டிவனம் தாலுகா கமிட்டிப் பேரவைக் கூட்டம திண்டிவனத்தில் நடந்தது. தோழர் ஆர். முருகேசன் தலைமை வகித்தார். தோழர் பி. ஜெயராமன் குன்றுலம் முடிவுகளை விளக்கிப் பேசினார்.

நகரில் உணவுப் பொருள் விலை உயர்ந்திருப்பதைப்போல் சர்க்கரைக்கும் பஞ்சம் ஏற்பட்டுள்ளதென்றும் ஆவன செய்ய வேண்டுமென்றும் தோழர் ஏ. முருகேசன் கூறினார்.

செஞ்சி, திண்டிவனம் தாலுகாக்களில் பஞ்சம் ஏற்பட்டுள்ள பகுதிகளில் நிவாரணம் கோரியும் விலைவாசி உயர்வைத் தடுக்க வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேறின.

நகர கமிட்டிக்குத் தோழர் ஏ. முருகேசனைச் செயலாளராகத் தேர்ந்தெடுத்தனர்.

### பெரியாங்குப்பம்

பெரியாங்குப்பம் கைத்தறி நெசவுத் தொழிலாளர் சங்க நிர்வாகக் கமிட்டி என். ராஜகோபால் தலைமையில் கூடியது, பெரியாங்குப்பம் கிராமத்திற்கு ஒரு நியாயவிலைக்கடை வேண்டுமென்றும் படி அரிசி 12 அணாவுக்கு தரவேண்டுமென்றும் இது குறித்து ராஜ்ய உணவு அமைச்சருக்கும் ஜில்லாகலெக்டருக்கும் மகஜர் அனுப்புவதென்றும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது

## தமிழ்நாடு ஓட்டல் தொழிலாளர் சம்மேளன 2வது மகாநாடு பற்றிய அறிவிப்பு

சென்னை, அக். 20—

தமிழ்நாடு ஓட்டல் தொழிலாளர் சம்மேளனத்தின் 2வது மகாநாடு நவம்பர் மாதம் கடைசி வாரத்தில் சேலத்தில் நடக்க விருப்பதால், சம்மேளனத்தின் இணைப்புக் கட்டணம் கட்டாத சங்கங்கள் உடனடியாகக் கட்டும்படி கேட்டுக் கொள்ளப்படுகின்றன.

புதிதாக இணைய விரும்பும் சங்கங்கள் கீழ்வரும் விலாசத்திற்கு எழுதவும் :

கே. எம். ஹரிபட்,
பொதுச் செயலாளர்,
தமிழ்நாடு ஓட்டல் தொழிலாளர் சம்மேளனம்,
நெ. 4, ஸ்டிரிங்கர் தெரு,
சென்னை.

மகாநாட்டை வெற்றிகரமாக நடத்த தமிழ்நாட்டிலுள்ள ஓட்டல் தொழிலாளர் சங்கங்கள் முழு ஒத்துழைப்பும் தரவேண்டுமென கேட்டுக்கொள்கிறேன்.

குறிப்பு : மகாநாடு பற்றிய விவரங்கள் தேவையான சங்கங்கள் கீழ்வரும் விலாசத்திற்கு எழுதித் தகவல்கள் பெற்றுக் கொள்ளவும் :

செயலாளர்,
வரவேற்புக் கமிட்டி,
நெ. 8, சி. பாலா பிள்ளை தெரு,
கோட்டை, சேலம்.

## தீவட்டிப்பட்டியில் கம்யூனிஸ்ட் கட்சி கிளை ஆரம்ப விழா

சேலம், அக். 18—

சேலம் நகரில் இருந்து 20 மைல் தூரத்தில் உள்ள தீவட்டிப்பட்டி என்ற கிராமத்தில் 16-10-59 மாலை 6 மணிக்கு மஜீத்கான் தலைமையில் கம்யூனிஸ்ட் கட்சி ஆரம்பவிழா பொதுக்கூட்டம் நடைபெற்றது.

மூத்துசாமி செங்கொடியை ஏற்றுவித்தார். சேலம் ஐக்கிய பீடித் தொழிலாளர் சங்க செயலாளர் எஸ். ரமணி, சேலம் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் கே. செல்லப்பன் ஆகியோர் இன்றைய அரசியல் நிலைமைகளைப் பற்றி பேசினர்.

முடிவில் விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்துமாறும், நல்ல அரிசி படி 12 அணாவுக்கு வழங்கவும், புன்செய் தான்யங்கள் ரூபாய்க்கு 3 படி வீதம் வழங்கவும், சர்க்கரை சகலருக்கும் கிடைக்கவும், ஏற்பாடு செய்யுமாறும் சர்க்காரை கோரியும்,

தீவட்டிப்பட்டியில் பிரசவ விடுதி-ஆஸ்பத்திரி ஏற்படுத்துமாறும் கோரி தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

மாலை 4 மணிக்கு கட்சி ஊழியர்கள் கூட்டம் நடைபெற்றது. கட்சி காரியாலயம் திறந்துவைக்கப்பட்டது. குழந்தைகளுக்கும் கூடியிருந்தோருக்கும் இனிப்புகள் வழங்கப்பட்டன.

தீவட்டிப்பட்டி கிளை செயலாளராக பாவாதின், உதவி செயலாளராக ஷம்சுதீன் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

லக்ஷ்மிநாயக்கன்பட்டி

## ஊராட்சி மன்றக் கூட்டம்

போடி, அக். 4—

லட்சுமிநாயக்கன்பட்டி ஊராட்சி மன்ற அவசரக் கூட்டம் தலைவர் வி. வி துரைராசு தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் செல்லாயிபுரத்திலிருந்து கிருஷ்ணன்பட்டிக்கும், லட்சுமிநாயக்கன்பட்டியிலிருந்து தம்பிநாயக்கன் பட்டிக்கும் ரோடு போடுவதெனத் தீர்மானிக்கப் பட்டது.

## கன்னிப்பட்டி வாய்க்காலை விஸ்தரிக்க கோரிக்கை

கீழ்வாணி, அக். 15—

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி கீழ்வாணி கமிட்டி கூட்டம் 15ந் தேதி நடந்தது.

கொடிவேரியிலிருந்து கன்னிப்பட்டி வழியாக மசப்பானியூர் வரை வரும் கன்னிப்பட்டி வாய்க்காலை நகலூர் கிராமம் வழியாக ஆப்பக்குடல் கிராமம் வரையில் சர்க்கார் விஸ்தரிக்க வேண்டுமென்று கோரும் மகஜரில் 10 ஆயிரம் விவசாயிகளிடம் கையெழுத்துக்கள் வாங்கி சம்பந்தப்பட்ட அமைச்சருக்கும் அதிகாரிகளுக்கும் அனுப்புவதென்று முடிவு செய்யப்பட்டது

## பழனி தாலுக்கா பஞ்சாயத் தலைவர்கள் சங்கம்

பழனி, அக். 15—

பழனி தாலுக்கா பஞ்சாயத்து தலைவர்கள் சங்கக் கூட்டம் திரு. கே. குமாரவேல் தலைமையில் நடைபெற்றது. நாற்பதுக்கு மேற்பட்ட பஞ்சாயத்துத் தலைவர்கள் கலந்து கொண்டனர்.

மதுரை மாவட்டத்தின் விவசாய இயக்கத்தின் சிறந்த தொண்டர் தோழர் எம். ஏ. வெங்கடாசலத்தின் மறைவிற்கு அஞ்சலி செலுத்தப்பட்டது. கிராமப் பஞ்சாயத்துக்களில் ரேடியோ பராமரிப்பிற்காக அரசாங்கம் ஆண்டொன்றிற்கு 90 ரூபாய் வசூலிப்பதை 45 ரூபாயாகக்குறைக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்ளப் பட்டது தோழர் ஆர். என். பாலசுப்பிரமணியம் நன்றி கூறினார்.

## மேல் விசாரம் ஊராட்சி மன்ற தொழிலாளர் கூட்டம்

மேல்விசாரம், அக் 17—

மேல்விசாரம் ஊராட்சி மன்ற தொழிலாளர்கள் ஜெனரல்பாடி கூட்டம் தோழர் சந்திரன் தலைமையில் நடந்தது. வட ஆற்காடு மாவட்ட ஊராட்சி, நகராட்சி மன்ற தொழிலாளர் சங்க செயலாளர் தோழர் எஸ் யூ. காஜா தஞ்சை மாநாட்டு முடிவுகளை பற்றி ரிப்போர்ட் செய்தார்.

# உணவுச் சூதாடிகளுக்கு பாங்கு பணம் கடன் கொடுப்பதேன்?



சென்னையில் இ. எம் எஸ். வரவேற்பு ஊர்வலத்தில் சென்ற வகை வகையான ஜோடனை வண்டிகளில் ஒன்று. போட்டோ: கே. எம்.



## நூறு ரூபாய் ரேடியோ செட்டுகள் தயாரிப்பு

### மத்திய சர்க்கார் முயற்சி எடுக்கிறதாம்

புனா அக். 19—

பூனாவிலிருந்து 15 மைல் தொலைவிலுள்ள லோனி என்ற இடத்தில ரேடியோ செட்டுகள் தயாரிப்பு தொழிற்சாலைக்குப் புதிய கட்டிடத்தைத் தொழில் மந்திரி மனுபாய் ஷா இன்று ஆரம்பித்து வைத்தார்.

தொழில் மந்திரி பேசுகையில் "3-வது திட்ட காலத்தில் 100 ரூபாய் முதல் 150 ரூபாய் விலையில் ரேடியோ செட்டுகள் தயாரித்து விற்பது சாத்தியமே. இது சம்பந்தமாக மத்திய சர்க்கார் தீவிரமாக முயற்சித்து வருகிறது. சரச விலை ரேடியோ செட்டுகள் தயாரிப்பு சம்பந்தமாக சர்க்கார் நியமித்த கமிட்டி அடுத்த சில மாதங்களில் தனது அறிக்கையைச் சமர்ப்பித்து விடும்" என்றார்.

## நீர் மட்டம்

சென்னை, அக் 20—

| | | | |
|---|---|---|---|
| மேட்டூர் | 19/10 | 117 6 | அடி |
| பெரியாறு | 19/10 | 43 6 | அடி |
| வைகை | 17/10 | 28 1 | அடி |
| பாபநாசம் | 18/10 | 121 9 | அடி |
| கிருஷ்ணகிரி | 1 /10 | 46 9 | அடி |
| சாத்தனூர் | 18/10 | 52 0 | அடி |
| மணிமுத்தாறு | 16/10 | 79 4 | அடி |

## இன்றைய சினிமா

தமிழ்

காஸினோ — ராஜ சேவை
பாரத் — ராஜ சேவை
சயானி — ராஜசேவை
கெயிட்டி — நாடோடி மன்னன்
காமதேனு — மோஹினி
மஹாராணி — முதலாளி
ராக்ஸி — நாலுவேலி நிலம்
சித்ரா — நாலுவேலி நிலம்
கிரௌன் - வீரபாண்டிய கட்டபொம்மன்
பாரகன் — காவேரியின் கணவன்
பிரபாத் — காவேரியின் கணவன்
உமா — காவேரியின் கணவன்
வெலிங்டன் — மரகதம்
ஸ்ரீ கிருஷ்ணா — மரகதம்
தங்கம் -வாழவைத்த தெய்வம்
மஹாலக்ஷ்மி—கல்யாணப் பரிசு
சன் — கல்யாணப் பரிசு
கபாலி — அல்லி பெற்ற பிள்ளை
வீனஸ் — தாயைப்போல பிள்ளை நூலைப்போல சேலை
திருமகள் — ஓடி விளையாடு பாப்பா
ஜுபிடர் — உலகம் சிரிக்கிறது
லக்ஷ்மி — தேவதாஸ்
ராஜகுமாரி— மாயவீரன்
சரஸ்வதி— பஞ்சவ பகிமை

ஹிந்தி

மடலண்ட் — நவ்ரங்
பிராட்வே — நவ்ரங்
ஸ்டார் — காகஸ் கா-பூல்
பிளாஸா — கைதி நெ. 911
பத்மனாபா - மால்கா
செலக்ட — பஸ் பஞ்சாப் மெயில்
அசோக் — பாய் பெஹன
ஈராஸ் — ஜியபோ[illegible]

ஆங்கிலம்

நியூடோன் — Witnessefor the Prosucution
நியூ க்ளோப்— Hercles
நியூ எல்பின்ஸ்டன் — Rio Bravo
மினர்வா — Frontier Rangers
பிரைட்டன்— Unconquered

★

தாம்பரம் G.R. தியேட்டர்ஸ்
நான் சொல்லும் ரகசியம்

★

அரக்கோணம் கற்பகம் — வாழ முறைவைத்த தெய்வம்

பீகார் உபதேர்தல்

# காங்கிரஸ் அபேட்சகரை காங்கிரஸ் தலைவர்களே எதிர்க்கிறார்கள்

## கம்யூனிஸ்ட் கட்சிக்கு ஆதரவு பெருகுகிறது

பாட்னா, அக் 16—

"சாப்ரா ஜில்லாவில் சிவான் தொகுதியில் நடைபெறும் உபதேர்தலில் அதிகாரபூர்வமான காங்கிரஸ் அபேட்சகரை, காங்கிரஸ் பிரமுகர் ஒருவரே எதிர்த்துப் போட்டியிடுகிறாராம்.

மத்திய பாராளுமன்ற போர்டின் காங்கிரஸ் அபேட்சகர் தேர்வு ஆனும் கோஷ்டியின் ஆதிக்கத்தில் ... என்ற காங்கிரஸ் கோஷ்டியினர், அபேட்சகராக போட்டியிடும், மண்டல காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் திரு. ... சிங்கை ஆதரிக்கிறார்களாம். ... சகோதரி திருமதி

சுந்தரி தேவி தான் காங்கிரஸின் அதிகார பூர்வமான அபேட்சகர். இவர் சென்ற பொதுத் தேர்தலில் பாட்னா தொகுதியில் தோல்வியுற்றார்.

கம்யூனிஸ்ட் கட்சி, பி. எஸ். பி ஜனசங்கமும் தங்கள் அபேட்சகர்களை நிறுத்தியுள்ளனர். பின் ... ஆதரவுடன் இன்னொருவர் சுயேச்சையாகப் போட்டியிடுகிறார். காங்கிரஸ்—கம்யூனிஸ்ட் களுக்கிடையே தான் போட்டி கடுமையாக இருக்கும் என்று அரசியல் வட்டாரங்கள் கருதுகின்றனர். தேர்தல் நவம்பர் 8-ந்தேதி நடைபெறுகிறது. —க. நி.

# உணவு விலையை கட்டுப்படுத்துக தவறினால் தக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும்

## தி. மு. க. மகாநாட்டில் தீர்மானம்

சென்னை, அக். 19—

அக். 17, 18 ஆகிய நாட்களில் சென்னையில் நடைபெற்ற சென்னை மாவட்ட தி மு க. வின் மகாநாட்டில் உணவு விலை உயர்வு குறித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. திரு. கே. கோவிந்தசாமியால் முன்மொழியப்பட்டு திரு. சி. ஆர். பாலசுப்பிரமணியம் வழிமொழியப்பட்டு ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது. தீர்மானத்தின் முழுவாசகம் பின் வருமாறு:

"தென்னாட்டில்—குறிப்பாக தமிழ் நாட்டில் — உணவுப் பொருட்களின் விலைகளும் வேகமாக அதிகரித்து வருவதோடு, போதுமான உணவுப் பொருள் கிடைக்காமல் பெரும் பற்றாக்குறை ஏற்பட்டிருப்பதால் ஏழை எளிய நடுத்தர மக்கள் கொடுமைகளுக்கு ஆளாகித் தவிப்பதால் ஜீவாதாரமான இந்த உணவுப் பிரச்னையில் தக்க காலத்தில் தக்க நடவடிக்கை எடுக்காமல் மாநில, மத்திய காங்கிரஸ் ஆட்சியினர் காட்டிய அலட்சியப் போக்கே இத்தக் கொடுமைக்கு காரணமாகும் என்பதால், அவர்களது போக்கினை இம் மகாநாடு வன்மையாகக் கண்டிக்கிறது.

"இனியும் உணவுப் பொருட்களின் விலையை கட்டுப்படுத்த மாநில, மத்திய அரசுகள் தவறுமானால் அவர்களின் இப்போக்கை வன்மையாகக் கண்டிக்கும் வகையில் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டுமென்று பொதுச் செயலாளர் அவர்களை இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது."

## எல்லை விஷயத்தில்

# கம்யூனிஸ்டுத் தலைவர்களிடையே கருத்து வேறுபாடு கிடையாது

## தோழர் கே. டி. கே. முழக்கம்

மதுரை, ஆக 19—

"இந்திய-சீன எல்லை விஷயத்தில் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர்களிடையே அடிப்படையான கருத்து வேற்றுமை இல்லை" என்று தோழர் கே. டி. கே. தங்கமணி நேற்று ஒரு கூட்டத்தில் பேசுகையில் கூறினார்.

அவர் மேலும் கூறுகையில், "எல்லை விஷயம் பற்றிய கம்யூனிஸ்டுக் கட்சியின் அபிப்பிராயத்தைத் திரித்துக்கூறி கேரள இடைத் தேர்தலில் கம்யூனிஸ்டுகளுக்கு விரோதமாகப் பயன்படுத்தப் பார்க்கிறார்கள். கம்யூனிஸ்டுக் கட்சியின் கண்ணோட்டத்தில் எவ்விதக் கூறும் இல்லை. எல்லையில் எவ்வித ஆக்கிரமிப்பும் நிகழவில்லை. ஆனால் வேண்டுமென்றே சுயநலக்கட்சிகள் கேரள வாக்காளர்களின் கண்களில் மண்ணைத் தூவி உண்மையை மறைக்கப் பார்க்கின்றன. தேர்தல் காலத்தில் கம்யூனிஸ்டுக் கட்சி சரியாக இடையறாமல் தடைகளும் செய்யக்கூடும் என்று நான் அஞ்சுகிறேன்!" என்று கூறினார்.

## ஈராக் பிரதமரைக் கொல்ல முயன்றோர் பிடிபட்டனர்

பாக்தாத், அக் 20—

ஈராக் பிரதமர் அப்துல் கரீம் காசிமைக் கொலை செய்ய முயன்றவர்கள் கண்டுபிடிக்கப்பட்டுவிட்டதாகவும் சதியில் சம்பந்தப்பட்ட அனைவரும் அடுத்த மாதம் ஆரம்பத்தில் வழக்கு மன்றத்தில் நிறுத்தப்படுவார்கள் என்று 'அல் ஜமான்' என்ற ஏடுதான் கூறுகிறது.

ஈராக் பிரதமர் பூரணமாகக் குணமடைந்து விட்டார் என்றும் அப்பத்திரிகை கூறுகிறது.

## மேற்கு வங்கத்தில் வெள்ளக்கொடுமை

### ஒரு ஜில்லாவில் மட்டும் லட்சம் வீடுகள் நாசம்

கல்கத்தா, அக் 19—

முர்ஷிதாபாத் ஜில்லாவில் மீண்டும் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கினால் சுமார் 1 லட்சம் வீடுகள் இடிந்து விட்டன எனவும் 10 ஆயிரம் சதுர மைல் நிலத்தில் நெற்பயிர்கள் நாசமுற்றன எனவும், ராஜ்ய வெளியுறவு இலாகா அமைச்சர் பி. ஸி. ஸின்ஹா அறிவித்துள்ளார்.

இந்த ஜில்லாவில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் விரிவாகச் சுற்றுப் பயணம் செய்துவிட்டு நேற்றிரவுதான் அவர் கல்கத்தா திரும்பினார்.

சுமார் 35 ஆயிரம் பேர் வெள்ளத்திலிருந்து மீட்கப்பட்டுள்ளனர் எனவும் அவர்கள் தற்காலிக முகாம்களில் வசித்து வருகின்றனர் எனவும் அவர் அறிவித்தார்.

## ஆஸ்திரேலியா அரபுக் குடியரசு உறவுகள்

கான்பெரா, அக். 19—

ஆஸ்திரேலியா அரசாங்கம் ஐக்கிய அரபுக் குடியரசுடன் திரும்பவும் ராஜதந்திர உறவுகளை ஏற்படுத்தி கொள்ளும் என்று தற்காலிக ஆஸ்திரேலிய வெளி விவகார மந்திரி சர் கார்பீல்ட் பார்விக் தெரிவித்தார்.

1956-ம் வருஷம் ஏற்பட்ட சூயஸ் கால்வாய் தகராறு காரணமாக இரண்டு நாடுகளுக்குமுள்ள உறவில் சிக்கல் ஏற்பட்டது. அதற்குப் பிறகு, ஆஸ்திரேலிய பிரதிநிதிகள் இல்லாத காலத்தில், கெய்ரோவில் இருக்கும் கனடிய தூதுவர் ஆஸ்திரேலியாவின் நலன்களைப் பாதுகாத்து வந்தார்.

இப்போது இந்த முடிவு இரண்டு நாடுகளினுடையவும் நலன்களைக் கருதி, இரண்டு நாடுகளினுடையவும் விருப்பப்படி மேற்கொள்ளப்பட்டுள்ளது. இரண்டு நாடுகளின் மத்தியில் ஏற்பட்ட பூர்வாங்கப் பேச்சின்படியே இந்த முடிவு எடுக்கப்பட்டுள்ளது என்று அவர் குறிப்பிட்டார்.

## உளவு வேலையில் ஈடுபட்டிருந்த அமெரிக்க ராஜதந்திரி

### டாஸ் தரும் தகவல்

மாஸ்கோ, அக் 19—

சோவியத் யூனியனிலுள்ள அமெரிக்கத் தூதராலயத்தைச் சேர்ந்த செக்யூரிட்டி ஆபீஸர் ரஸ்ஸல் லங்கெல் உளவு நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தார் என ருஷ்ய அதிகாரிகள் அறிவித்துள்ளனர்.

'டாஸ்' மூலம் வெளியிடப்பட்ட அறிக்கையொன்றில் அக். 16ந் தேதி லங்கெல் ருஷ்யாவை விட்டு வெளியேற வேண்டுமென ஆலோசனை கூறப்பட்டிருந்தார், எனவும் ஏனெனில் அவருடைய நடவடிக்கைகள் ஒரு ராஜதந்திரி என்ற அந்தஸ்துக்குப் பொருத்தமாக இருக்கவில்லை எனவும் கூறப்பட்டுள்ளது.

சோவியத் யூனியனிற்கு அவர் தம் வாசஸ்தலத்தை உளவு வேலைகளுக்குப் பயன்படுத்திக் கொண்டார் என்பது இப்பொழுது ஊர்ஜிதமாயிருக்கிறது.

## வலதுசாரி ஸ்தாபனங்கள் சோதிக்கப்பட்டன

### பிரான்ஸ் முழுவதும் பரபரப்பு

பாரீஸ், அக். 19—

பிரான்ஸிலுள்ள தீவிர வலதுசாரி இயக்கங்களின் தலைமை அலுவலகங்களை இரவுக்கிரவே போலீஸார் சோதனை செய்துள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

தீவிர வலதுசாரி ஸ்தாபனங்களைச் சேர்ந்த சுமார் 100 தலைவர்களின் வீடுகள் சோதனையிடப்பட்டுள்ளன.

அல்ஜீரியப் பிரச்னையில் தாராளமான முறையில் தீர்வுகாண வேண்டும் எனப் பேசிவரும் செனட்டர் பிராங்கோய்ஸ் மிட்டரண்ட் (பழைய நீதி இலாகா அமைச்சர்) மீது சென்ற வெள்ளியன்று துப்பாக்கித் தாக்குதலுக்கு முயற்சிக்கப்பட்டதென்பதும் இதே கருத்துடைய இதர அரசியல் வாதிகளும் மிரட்டப்பட்டு வருவதும் தான் இத்தகைய சோதனைகளுக்குக் காரணம் எனத் தெரிகிறது.

சோதனையின் விளைவுகள் உடனடியாகத் தெரியவில்லை. இச்சம்பவங்கள் நாடெங்கும் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியுள்ளன.

# உணவுப் பொருள் விலைகளைக் குறைக்க சர்க்காருக்கு ஒரு மாத அவகாசம்

## பிறகு போராட்டம் நிச்சயம்

குடியாத்தம், அக் 10—

தோழர்கள் வி. கே. கோதண்டராமன் எம்.எல்.ஏ., வி. முனுசாமி முதலியோர் 5-ந் தேதி கார்த்திகை சமுத்திரம், காக்காதோப்பு, கல்மடுகு, சருகுப்பம் முதலிய 17 கிராமங்களுக்கு விஜயம் செய்து மக்களின் குறைகளைக் கேட்டுத் தெரிந்து கொண்டனர்.

செட்டிக்குப்பத்தில் பாரதியார் வாசகசாலையைத் தோழர் கோதண்டராமன் திறந்துவைத்தார்.

பெரிய செட்டி குப்பம் கிராமத்தில் நடந்த பொதுக்கூட்டத்தில் தோழர்கள் சி. ஜி. கிருஷ்ணன், வி. கே. கோதண்டராமன், தெய்வம் ஆகியோர் பேசினர். சுதந்திரம் பெற்று 12 ஆண்டுகள் பூர்த்தியாகியும் உணவுப் பிரச்னையோ வேலையில்லாத் திண்டாட்டமோ தீர்க்கப்படவில்லை என்பதை அவர்கள் சுட்டிக்காட்டினர். இம்மாதம் இறுதி வரையில் சென்னை சர்க்காருக்கு அவகாசம் கொடுத்திருப்பதாகவும் அதற்குமேல் விவசாயிகளைக் கட்டுப்படுத்த போராட்டம் நடக்குமென்றும் குறிப்பிட்டார். கிராமங்களில் குடிதண்ணீர் கூட இல்லையென்பது கொடுமையிலும் கொடுமை என்றனர்.

4-ந் தேதி குடியாத்தம் டவுன் கண்ணுபுபேட்டையில் தோழர் எம். கே. பஞ்சாட்சரம் தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் தோழர்கள், வி. கே. கோதண்டராமன், எம்.எல்.ஏ., வி. முனுசாமி முதலியோர் உணவு விலை ஏற்றத்தைக் கண்டித்துப் பேசினர்.

## மேற்கு வங்க வெள்ளப் பகுதிகளை பிரதமர் நேரு பார்வையிடுவார்

கல்கத்தா, அக். 19—

மேற்கு வங்கத்தில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்டிருக்கும் பகுதிகளைப் பார்வையிடுவதற்காக அக் 21ல் இங்கு வரவிருக்கும் பிரதமர் நேரு டஷ்பூர் கஞ்சு (ஹௌரா ஜில்லா) ஹுகலி (ஹூக்ளி) கஞ்சு (பர்த்வான்) வல்லப்பாரா (நாதியா) ஆகிய இடங்களுக்கு வருவார் எனவும் அன்று மாலையே கல்கத்தா திரும்புவார் எனவும் பின்னர் நிருபர் மாநாட்டொன்றில் கலந்துகொள்வார் எனவும் அதிகாரபூர்வமாக அறிவிக்கப்பட்டுள்ளது.

பிரதமருடன் ராஜ்ய கவர்னர் குமாரி பத்மஜா நாயுடு, டாக்டர் பி. ஸி. ராய், உணவு இலாகா அமைச்சர் பி. ஸி. ஸென் ஆகியோர் வருவர்.

# அமெரிக்கா பாகிஸ்தானுக்கு தொடர்ந்து ராணுவ உதவி அளிக்குமாம்!

## அமெரிக்கத் தூதுவர் பேச்சு

லாகூர், அக் 19—

அமெரிக்கா பாகிஸ்தானுக்கு ராணுவ உதவியைத் தொடர்ந்து அளிக்குமென்று பாகிஸ்தானிலிருக்கும் அமெரிக்க தூதுவர் வில்லியம் ரௌன்ட்ரீ இன்று இங்கு கூறினார்.

பாகிஸ்தான் தூதுவராகப் பதவி ஏற்றபிறகு முதன் முதலாக லாகூருக்கு இவர் விஜயம் செய்திருக்கிறார். அமெரிக்க செய்தி ஸ்தாபனத்தில் பாகிஸ்தான் பத்திரிகை நிருபர்களிடையே பேசினார். அயல்நாட்டு நிருபர்கள் அனுமதிக்கப்படவில்லை.

பாகிஸ்தானின் பாதுகாப்பைப் பேணுவதில் பாகிஸ்தான் மிகப் பெரிய பங்கு ஆற்றவேண்டியுள்ளது. இதற்காக தனது அமெரிக்க நண்பர்களிடமிருந்து பாகிஸ்தான் ஆழ்ந்த கவனத்தைப் பெற அருகதையுள்ளது என்றார்.

அவர் மேலும் கூறியதாவது: அமெரிக்காவின் உதவி திட்டத்தில் பாகிஸ்தான் பெருமளவு பெற்றுள்ள நாடுகளில் ஒன்று. ஆனால் பாகிஸ்தான் அமெரிக்க நட்புறவில் இது ஒரு அம்சம் தான். நமக்களிடையே மேலும் பல இணைப்புகள் இருக்கின்றன என்று கூறினார்.

(பி. டி. ஐ)

## பாகிஸ்தானுக்கு ராணுவ உதவி

### அமெரிக்கா மேலும் அளிக்குமாம்

லாகூர், அக். 21—

"அமெரிக்கா பாகிஸ்தானுக்கு மேலும் மேலும் ராணுவ உதவி அளிக்கும்" என்று பாகிஸ்தானிலுள்ள அமெரிக்க தூதர் நேற்று இங்கு கூறினார்.

அமெரிக்க தகவல் காரியாலயத்தில் நடைபெற்ற நிருபர்கள் கூட்டத்திலேயே மேற்கண்டவாறு கூறினார். இக்கூட்டத்தில் வெளிநாட்டுப் பத்திரிகை நிருபர்கள் எவரும் அனுமதிக்கப்படவில்லை.

அவர் மேலும் கூறுகையில், "பாகிஸ்தான் அமெரிக்க நண்பர்களிடமிருந்து உதவி பெறுவதற்குத் தகுதியுடையதேயாகும். நான் இங்கு வந்து இரண்டு மாதகாலமேயானாலும் பல்வேறு துறைகளில் பாகிஸ்தானின் சாதனை என்னை மிகவும் கவர்ந்திருக்கிறது. உண்மையில் நான் எதிர்பார்ப்பதற்கு மேலாகவே பாகிஸ்தான் பல சாதனைகளைச் சாதித்திருக்கிறது" என்று ராணுவ ஆட்சிக்குப் புகழ் மாலை சூட்டினார்.

# சிதம்பரம் உபதேர்தல் முடிவு

சென்னை, அக் 20—

சுவாமி சகஜானந்தரின் மரணத்தால் சிதம்பரம் (ரிசர்வ்) தொகுதியில் நடந்த சென்னை சட்டசபை இடைத் தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகர் பி. அரசன் வெற்றிபெற்றார்.

தி மு க. அபேட்சகர் புலவர் கே. ஆறுமுகத்தைவிட பி. அரசனுக்கு 12 913 அதிக வாக்குகள் கிடைத்தன.

இந்தத் தொகுதியில் மொத்த வாக்காளர் 1 45 000 பேர். அவர்களில் 34 சதவீதம் பேர் ஹரிஜனங்கள்.

| | |
|---|---|
| காங்கிரஸ் | 53 313 |
| தி. மு க. | 40 400 |
| செல்லுபடியாகாத ஓட்டுகள் | 3164 |



சென்னை நகரைக் குலுக்கிய, ஆற்றுவெள்ளம்போல் செங்கொடிகள் அலைவீசிப் பறந்த ஊர்வலத்தின் ஒரு காட்சி; அக். 18ல் இ. எம். எஸ்.ஸை வரவேற்க நடைபெற்றது. போட்டோ: ஜே. எம். கல்யாணம்.

# "இலங்கை மந்திரி சபையில் தரமற்ற விசித்திர மனிதர்கள்"

## பிரிட்டிஷ் ரேடியோ விமர்சனம்

### பிரதமரின் ஆட்சேபம்

கொழும்பு அக் 19—

இலங்கை மந்திரிசபையை இழிவுபடுத்தும் முறையில் பிரிட்டிஷ் ரேடியோ இலங்கை மந்திரிசபையை விமர்சனம் செய்திருப்பதை கண்டிக்கும் முறையில் இலங்கைப் பிரதமர் தகநாயகா பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குத் தனது எதிர்ப்பைத் தெரிவித்துள்ளார்.

இலங்கைப் பிரதமரின் எதிர்ப்பு இலங்கையிலுள்ள பிரிட்டிஷ் தூதுவரிடம் கொடுக்கப்பட்டுள்ளது.

சன்டே அப்சர்வர் என்ற இலங்கைப்பத்திரிகை பிரிட்டிஷ் ரேடியோ ஸ்தாபனமான பி. பி. ஸி.யின் இந்த விமர்சனத்தைத் தலைப்புச் செய்தியாகப் போட்டு கொட்டை எழுத்துக்களில் பிரசுரித்திருந்தது. அதில் இலங்கை பிரதமர் பண்டாரநாயகா படுகொலை செய்யப்பட்ட பிறகு அமைக்கப்பட்டுள்ள மந்திரிசபையில் பெரும்பாலும் தரமற்றவர்களே இருக்கின்றனர் அவர்கள் அனைவரும் அனுபவமில்லாத விசித்திர குணம் படைத்தவர்கள் என்று பி.பி.ஸி குறிப்பிட்டிருப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

இந்நிலையில் தகநாயகாவின் மந்திரிசபை வெகுகாலம் நீடிக்குமா என்பது சந்தேகமே என்று ரேடியோ கூறியுள்ளது.

தற்போது அமுலாக்கப்பட்ட பத்திரிகை தனிக்கைச் சட்டமானது, புத்தக மியார்கள் அரசியலில் தலையிடுவது கூடாது என்று வளர்ந்துவரும் மக்கள் கிளர்ச்சியை ஒடுக்குவதற்காக வேண்டி, புத்தச மியார்களால் நிர்ப்பந்திக்கப்பட்டுக் கொண்டுவரப்பட்ட சட்டம் என்று பி.பி.ஸி விமர்சித்திருப்பதாக அந்தப் பத்திரிகை குறிப்பிடுகிறது.

## பயங்கர வெள்ளச் சேதம்

புதுடில்லி, அக் 21—

மேற்கு வங்கம் ஒரிசா, குஜராத், விதர்ப்பம், சௌராஷ்டிரம் ஆகிய பகுதிகளில் ஏற்பட்ட கொடும் புயலுக்கு மொத்தம் 400 பேர் பலியானார்கள். இன்னும் மேலும் அதிகமான எண்ணிக்கையில் மக்கள் மாண்டிருப்பர் என்று பேசிக்கொள்ளப்படுகிறது.

இந்தப் புயலினாலும், வெள்ளத்தாலும் மூன்று ராஜ்யங்களிலும் 30 லட்சம் மக்கள் அகதிகளானார்கள்.

மொத்தம் 13 லட்சம் ஏக்கரா விளை நிலம் வெள்ளத்தால் பாதிக்கப்பட்டது. சுமார் 6 லட்சம் டன் அரிசி உற்பத்தி குறைந்துபோகுமென்று இந்திய சர்க்கார் கருதுகிறது.

## பிச்சைக்காரரின் நிவாரண உதவி

செராம்பூர், அக் 20—

மேற்கு வங்கத்தில் வெள்ளக் கொடுமைக்கு ஆளான மக்களுக்கு உதவ கண் தெரியாத ஒரு பிச்சைக்காரரும் முன்வந்திருக்கிறார்!

சாந்தோஷ் சந்திரா என்ற நாற்பது வயதான அக் கண் தெரியாத பிச்சைக்காரர் மூப்பது ரூபாய் 25 நயே பைசா நிவாரண நிதிக்கு அளித்துள்ளார்.

## நடக்க இருப்பவை

### விலைவாசி உயர்வைக் கண்டித்து பொதுக்கூட்டம்

21-10-59 புதன்கிழமை மாலை 6 மணிக்கு தோழர் பி எம். கிருஷ்ணன் தலைமையில் தோழர்கள் கே. எம். ஹரிபட், அ. சிங்காரம் பி. முருகேசன் ஆகியவர்கள் உணவு தானிய விலை உயர்வைக் கண்டித்து பேசுவார்கள்.

21-10-59 புதன் மாலை 7 மணிக்கு 2-வது நாராயணன் தெருவில் (ஏழு கிணறு வடக்கு, சென்னை) தோழர் ஆர் கே லோகநாதன் தலைமையில் தோழர்கள் எஸ். சம்பத்குமார், சி. ஏ. முனி முதலியோர் பேசுவர்.

21-10-59 புதன் மாலை 5-30 மணிக்கு பெரம்பூர் மைதானத்தில் தென் பிராந்திய ரெயில்வே லேபர் யூனியன் பொதுக்கூட்டம் நடைபெறும். தோழர்கள் ஆர்.வி. கிருஷ்ணமூர்த்தி, கே. மோகனஜி ஜகதீசன் முதலியோர் பேசுவர்.

## தணிக்கை ரத்து

கொழும்பு, அக். 20—

செய்திகளின் மீது சுமத்தப்பட்டிருந்த தணிக்கைத் தடை இன்று பிற்பகலுக்குப் பிறகு ரத்துச் செய்யப்பட்டது.





## சென்னை-1

22—10—59

காலை முதல் ஒலிபரப்பு

6 55 மங்கள இசை, 7-00 துதிப்பாடல்கள் 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் வானிலை அறிவிப்பு 7-15 தமிழில் செய்தி, 7-30 பி. ராமசுவாமி பாட்டு, 8-00 மதுரகீதம், 8-15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு

12 30 நடுத்தரப் பள்ளிகளுக்கு 1.00 மஹிளாமண்டலி 1 30 கானமஞ்சரி, 1 40 ஹிந்தியில் செய்தி, 1-50 இசைச் செண்டு, 2-00 தமிழில் செய்தி, 2-10 உயர்தரப் பள்ளிகளுக்கு, 2-40 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்றாவது ஒலிபரப்பு

5-30 எஸ்கே தணிகாசலம் ராமசுவாமிபிள்ளை நாதஸ்வரம், 6-05 பிராந்தியச் செய்திகள் 6-15 கிராம நிகழ்ச்சிகள் (திருச்சி அஞ்சல்) 7-15 தமிழில் செய்தி, 7 30 புகழ்பெற்ற நாயகர் பேச்சு, (திருச்சி அஞ்சல்) 7-40 வாத்ய இசை, 7-45 ராகம், தானம், பல்லவி தஞ்சாவூர் கே. பி. சிவானந்தம் பிள்ளை ஸி ஆர் சாரதா இரு வீணைகள், எஸ். வி. எஸ் நாராயணன் மிருதங்கம், 8 3 Radio News Reel. Relay from Delhi) 8 40 வாத்ய இசை, 8-45 இசை மாலை 9-00 டி. என். பலசுப்ரமணியம் பாட்டு, 9-30 அகில பாரத நாடக நிகழ்ச்சி (தமிழ்) 10-30 வானிலை அறிவிப்பு, ஒலிபரப்பு முடிவு.

## திருச்சி

22—10—59

காலை முதல் ஒலிபரப்பு

7.00 இசைக்கதிர் துதிப்பாடல்கள் 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் 7-15 தமிழில் செய்தி 7 30 எஸ். சுப்ரமணியம் பாட்டு 8.00 ஆங்கிலத்தில் செய்தி 8.15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு

12 30 நடுத்தர பள்ளிகளுக்கு 1.00 கதம்பம், 1 40 ஹிந்தியில் செய்தி, 1-50 ஜலதரங்கம், 2-00 தமிழில் செய்தி, 2-10 உயர்தரப் பள்ளிகளுக்கு, 2-40 இடைவேளை 2-45 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்றாவது ஒலிபரப்பு

4-45 விவித பாரதி கர்நாடக சங்கீத நிகழ்ச்சி (பம்பாய் அஞ்சல்) 5-45 இசைப் பயிற்சி 6.00 அறிவிப்புகள் 6 05 பிராந்தியச் செய்திகள், 6-15 கிராம நிகழ்ச்சிகள் 7-15 தமிழில் செய்தி 7-30 புகழ்பெற்ற நாயகர் 7-40 இம்மாதப் பாடல் 7-45 ராகம், தானம், பல்லவி—தஞ்சாவூர் கே. பி சிவானந்தம் பிள்ளை, ஸி ஆர். சாரதா இரு வீணைகள் (சென்னை அஞ்சல்) 8-30 டெல்லி அஞ்சல் 8-40 திரைப்பட இசை 9.00 ஆங்கிலத்தில் செய்தி, 9-15 சுபத்த சங்கீதம் 9 30 அகில பாரத நாடக நிகழ்ச்சி (தமிழ்) 10-30 ஒலிபரப்பு முடிவு.

ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு, வெளியிட்டவர் எஸ். கிருஷ்ணசாமி
ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.
முகவரி: 32, பிராட்வே, சென்னை-1
Janasakthi
Broadway, Madras-1.

# பதுக்குவோரைப்பிடி கொள்முதல் செய் படி அரிசி 12 அணாவில் கொடு!